யூரி துருழ்கோவ்

# மாயப் பென்சிலும் வீரத் திருகாணியும்

உண்மையை ஒட்டிய கதை

ராதுகா பதிப்பகம்
மாஸ்கோ



நியூ செஞ்சுரி புக் ஹவுஸ் பிரைவேட் லிமிடெட்
விற்பனையாளர்கள்
சென்னை

## அத்தியாயம் ஒன்று

### இதிலே வரைந்த மிட்டாயைத் தின்னலாம், பச்சை வெள்ளரிக்காயில் பறக்கலாம்

ஒரு பெரிய பட்டணத்திலே, இனிய மணி வீதி என்ற பெயர் உள்ள நிரம்ப அழகான தெருவிலே, மிக மிகப் பெரிய விளையாட்டுச் சாமான் கடை ஒன்று இருந்தது.

ஒரு நாள் கடையிலே யாரோ தும்மினார்கள்!

சின்னப் பையன்களுக்கும் பெண்களுக்கும் விளையாட்டுச் சாமான்களைக் காட்டிக் கொண்டிருந்த விற்பனை ஆள் தும்மி இருந்தால் அதில் ஆச்சரியப்படுவதற்கு ஒன்றும் இல்லை. வாங்க வந்த சின்னவர்களில் யாராவது தும்மி இருந்தாலும் வியப்பு அடைவதற்கு ஒன்றும் இல்லை. ஆனால் தும்மியது விற்பனை ஆளோ வாங்க வந்த சின்னவர்களில் யாரேனுமோ அல்ல. விளையாட்டுச் சாமான் கடையில் தும்மினது யார் என்பது எனக்குத் தெரியும்! யாரும் என்னை முதலில் நம்ப மாட்டார்கள், இருந்தாலும் சொல்லி விடுகிறேன்.

தும்மினது ஒரு பெட்டி! ஆமாம்! வண்ணப் பென்சில்கள் வைப்பதற்கான அட்டைப் பெட்டி. விளையாட்டுச் சாமான்கள் இருந்த அறையில் பெரியவையும் சின்னவையுமான பெட்டிகளுக்கும்

டப்பாக்களுக்கும் நடுவே கிடந்தது அந்தப் பெட்டி. அதன் மேல் வண்ண எழுத்துக்களில் அச்சிடப் பட்டிருந்தது:

''சின்ன மாய வித்தைக்காரன்''
என்னும் வண்ணப் பென்சில்கள்

ஆனல் சேதி இதோடு முடிந்து விடவில்லை. பக்கத்திலே கிடந்தது இன்னொரு பெட்டி. அதன் மேல் இந்தப் பெயர் எழுதி இருந்தது:

பொறி அமைப்பாளன் ''மேஸ்திரி திருகாணி''

ஆயிற்று. முதல் பெட்டி தும்மினதும் இரண்டாவது பெட்டி, ''நீண்ட ஆயுளோடு இரு!'' என்று வாழ்த்திற்று.

பிறகு முதல் பெட்டியின் பகட்டான மூடி கொஞ்சம் போல உயர்ந்து ஒரு பக்கம் விழுந்தது. அதற்கு அடியில் பெட்டியில் இருந்தது ஒரே ஒரு சின்னப் பென்சில். ஆனல் எப்பேர்ப் பட்ட பென்சில்! சாதாரணப் பென்சில் அல்ல, வண்ணப் பென்சிலும் அல்ல. நிரம்ப அசாதாரணமான, அற்புதமான பென்சில்!

பாரேன் அதை, வேடிக்கையானது, அல்லவா?

பென்சில் ''பொறி அமைப்பாளன்'' என்ற பெட்டியின் பக்கம் போய், மர மூடியைத் தட்டி, ''யார் அங்கே?'' என்று கேட்டது.

''நான்தான்! மேஸ்திரி திருகாணி!'' என்று பதில் வந்தது. ''எனக்கு வெளியே வர உதவி செய்யேன். என்னுல் முடியவே இல்லை!..'' பின்பு பெட்டிக்குள் எதுவோ கிலுங்கிக் கணகணத்தது போல் இருந்தது.

அப்போது பென்சில் பெட்டி மூடியைத் தன் பக்கம் இழுத்து உயர்த்தி, விளிம்பு வழியாக பெட்டிக்குள் பார்த்தது. பல வகையான பளிச்சிடும் முறுக்காணிகளும் சுரைகளும் உலோகத் தகடுகளும் பல்சக்கரங்களும் சுருள் கம்பிகளும் சக்கரங்களும் அங்கே பளிச்சிட்டன. அவைகளுக்கு நடுவே உட்கார்ந்திருந்தான் விந்தையான இரும்பு மனிதன். அவன் விசைவில் பொம்மை போலப் பெட்டியிலிருந்து வெளியே துள்ளிக் குதித்தான். சுருள் கம்பிகளால் ஆன வேடிக்கையான மெல்லிய கால்களில் அசைந்தாடினுன். பின்பு பென்சிலைப் பார்வை இடத் தொடங்கினுன்.

''நீ யார்?'' என்று ஆச்சரியத்துடன் கேட்டான்.

''நானா?.. நான் மாய ஓவியன்! என் பெயர் பென்சில். உயிருள்ள படங்கள் வரைய என்னால் முடியும்.''

''உயிருள்ள படங்களா? அப்படி என்றால் என்ன அர்த்தம்?''

''அதாவது, உனக்கு வேண்டுமானால் நான் ஒரு பறவையின் படம் வரைகிறேன். அது உடனே உயிர் பெற்றுப் பறக்கும். அப்புறம் மிட்டாயின் படம் வரைவேன். அதைத் தின்னலாம்...''

''சும்மா சொல்கிறாய்!'' என்றான் இரும்பு மனிதன். ''இப்படி நடக்காது!'' என்று சிரித்தான். ''நடக்கவே நடக்காது!''

''மாய வித்தைக்காரர்கள் பொய்யே பேச மாட்டார்கள்'' என்றான் பென்சில். அவனுக்கு ரோசமாய் இருந்தது.

''அப்படியானால் எங்கே, விமானப் படம் வரை! நீ சொல்வது உண்மையானால் நீ எப்பேர்ப்பட்ட மாயவித்தைக்காரன் என்று பார்த்து விடுவோம்.''

''விமானமா? அது என்ன என்று எனக்குத் தெரியாதே'' என்று ஒப்புக் கொண்டான் பென்சில். ''காரட்டுக் கிழங்கின் படம் வரைகிறேனே, வரையட்டுமா?''

''எனக்கு ஒன்றும் வேண்டாம் காரட்டு!

ஆமாம், நீ என்ன, விமானத்தைப் பார்த்ததே கிடையாதா? வேடிக்கைதான்!''

பென்சிலுக்கு மறுபடி ரோசமாய் இருந்தது.

''தயவு செய்து கேலி பண்ணுதே. நீ எல்லாவற்றையும் கண்டவன் என்றால் சொல்லு, விமானம் எப்படி இருக்கும் என்று. அது எது மாதிரி இருக்கும்? அப்போது வரைவேன். என்னுடைய பெட்டியில் வரைபடப் புத்தகம் இருக்கிறது, வண்ணங்கள் தீட்டுவதற்காக. வீடுகள், பறவைகள், காரட்டுக் கிழங்குகள், வெள்ளரிக் காய்கள், மிட்டாய்கள், குதிரைகள், கோழிக்குஞ்சுகள், கோழிகள், பூனைகள், நாய்கள், இவைகளுடைய வரைபடங்கள் அதிலே இருக்கின்றன. வேறு எதுவும் இல்லை! விமானங்களே கிடையாது!''

திருகாணி மேஸ்திரி துள்ளினன். அவனுடைய விசை வில்கள் கணகணத்தன.

''ஐயோ, எவ்வளவு மோசமான படங்கள் உன் புத்தகத்தில்! கவர்ச்சியே இல்லையே! கிடக்கிறது! நான் காட்டுகிறேன் உனக்கு விமானம். நீளமான பெரிய வெள்ளரிக்காய்க்குச் சிறகுகள் முளைத்தால் எப்படி இருக்குமோ அப்படி இருக்கும் அது. என் பெட்டிச் சாமான்களைக் கொண்டு விமானத்தின் மாதிரி தயாரிக்கிறேன் பார்.''

திருகாணி மேஸ்திரி சட்டென்று பெட்டியில் பாய்ந்தான்.

உலோகத் தகடுகளை அவன் கிலுக்கினுன், தேவையான முறுக்காணிகளையும் பல்சக்கரங்களை யும் தேடி எடுத்தான், வேண்டிய இடத்தில் பொருத்தி முடுக்கினுன், திருப்புளியைச் சாமர்த் தியமாகக் கையாண்டான், சம்மட்டியால் மட்டு மட்டென்று அடித்தான், ஓயாமல் இந்தப் பாட் டைப் பாடிக் கொண்டிருந்தான்:

''எல்லாம் செய்ய வல்லவன் நானே,
பொல்லா மாயத்தை நம்பேனே!
நானே! நானே! நானே!''

பென்சிலோ, பையிலிருந்து வண்ணப் பென் சில்களை எடுத்து, நிரம்ப நேரம் யோசித்து, வெள்ளரிக்காயின் படத்தை வரைந்தான். தளதள வென்று பச்சையாக, சின்னப் புடைப்புக்கள் உள்ள தாக இருந்தது அது. பிறகு அதற்கு இறக்கை கள் வரைந்தான்.

''இந்தா, திருகாணி மேஸ்திரி! இங்கே வா! விமானம் வரைந்திருக்கிறேன் பார்!'' என்று அழைத்தான்.

''ஒரு நிமிடம் பொறு!'' என்ருன் மேஸ்திரி. ''உந்து விசிறியைப் பொருத்துவதுதான் பாக்கி,

விமானம் தயார் ஆகி விடும். முறுக்காணியை எடுத்து விசிறி அலகுகளை மாட்டி, அடிப்போம் ஒரு தரம், இரண்டு தரம்... அவ்வளவு தான்! பார் விமானம் எப்படி இருக்கிறது என்று!''

திருகாணி மேஸ்திரி பெட்டிக்கு வெளியே தாவினான். அவன் கைகளில் விமானம் இருந்தது. அசல் விமானம் போலவே! இந்த விமானத்தைப் பற்றி நான் ஒன்றும் சொல்லப் போவதில்லை. ஏன் என்றால் எல்லாப் பையன்களும் பெண்களும் விமானங்களைப் பார்த்திருக்கிறார்கள். பென்சில் ஒருவன்தான் பார்த்ததே இல்லை.

''ஆகா, எவ்வளவு நன்றாக வரைந்திருக்கிறாய்!'' என்று பாராட்டினான்.

''அட நீ ஒன்று!'' என்று புன்னகை செய்தான் திருகாணி மேஸ்திரி. ''எனக்குப் படம் போடவே வராது. 'அமைப்பாளன்' பெட்டியிலிருந்து பகுதிகளை எடுத்துப் பொருத்தி விமானம் தயாரித்தேன்'' என்றான்.

அப்போது அவன் பார்வையில் பட்டது வெள்ளரிக்காய், தளதளப்பான பச்சை வெள்ளரிக்காய்.

''எங்கே கிடைத்தது உனக்கு வெள்ளரிக்காய்?'' என்று ஆச்சரியப்பட்டான்.

''இது... இது என் விமானம்...''

திருகாணி மேஸ்திரி சுருள் கம்பிகள் எல்லாம் கணகணக்கும்படிக் குலுங்கிக் குலுங்கிச் சிரித்தான்.

சரியான கிண்டல் பேர்வழி இந்தத் திருகாணி மேஸ்திரி! யாரோ கிச்சுக்கிச்சு மூட்டுவது போலப் பொங்கிப் பொங்கிச் சிரித்துக் கொண்டு போனான். சிரிப்பை நிறுத்தவே முடியவில்லை அவனால்.

பென்சிலுக்கு ரோசம் பொத்துக் கொண்டு வந்தது. அவன் உடனே சுவர் மேல் மேகத்தின் படத்தை வரைந்தான். மேகத்திலிருந்து உண்மையான மழை பெய்தது. திருகாணி மேஸ்திரி உச்சந்தலை முதல் உள்ளங்கால் வரை தொப்பலாக நனைந்து போய், சிரிப்பதை நிறுத்தினான்.

''அடடடா...'' என்று வெடுவெடுத்தான். ''எங்கிருந்து வந்தது இந்தப் பாழாய்ப்போன மழை? எனக்குத் துருப்பிடித்து விடுமே!''

''பின்னே எதற்காகக் கேலி செய்கிறாய்? வெள்ளரிக்காய் மாதிரி என்று நீதானே சொன்னாய்!'' என்று கத்தினான் பென்சில்.

''ஐயையோ, என்னால் தாங்க முடியவில்லையே! ஐயோ, எனக்குச் சிரிப்பு மூட்டாதே. இல்லாவிட்டால் என் மரைகள் எல்லாம் கழன்று போகும்... நல்ல விமானந்தான் போ! வெள்ளரிக்

காயில் கோழி இறகுகளை எதற்காகச் செருகி இருக்கிருய்? ஹ-ஹ-ஹா! இந்த மாதிரி விமானம் எங்குமே பறக்காது!''

''பறக்கும் என்கிறேன் நான்! இறக்கைகள் பறக்கும், விமானமும் பறக்கும்.''

''அப்புறம் எஞ்சின் எங்கே இருக்கிறது உன் விமானத்தில்? இயக்கு சக்கரம் எங்கே? இவை இல்லாமல் விமானம் பறக்காதே!''

''என் விமானத்தில் உட்காரேன்! காட்டுகிறேன் உனக்கு, பறக்குமா பறக்காதா என்று!'' இப்படிச் சொல்லி, வெள்ளரிக்காய் மேல் சவாரி செய்பவன் போல உட்கார்ந்தான் பென்சில்.

திருகாணி மேஸ்திரி கடகடவென்று சிரித்துக் கொண்டே வெள்ளரிக்காய் மேல் விழுந்தான். அந்த நேரத்தில் திறந்த சன்னல் வழியே காற்று வீசிற்று. திடீரென்று இறக்கைகள் அடித்துக் கொண்டன. வெள்ளரிக்காய் நடுநடுங்கி, அசல்விமானம் போல உயரே கிளம்பிற்று.

''ஐயோ!'' என்று சேர்ந்து வீரிட்டார்கள் பென்சிலும் திருகாணியும்.

''கிர்ர்ர்! தடார்!..''

புதிதாய்ப் பறித்த வெள்ளரிக்காய், உண்மையான பச்சை வெள்ளரிக்காய், சன்னல் வழியாகப்

பறந்து போய், வெளியே தரையில் மோதின சத்தம் இது.

மெய்யாகவே, விமானத்தில் சுக்கான் எதுவும் இல்லை. சுக்கான் இல்லாமல் பறக்க முடியுமா எங்காவது? முடியவே முடியாது. அதனுல்தான் விமானம் விழுந்து நொறுங்கி விட்டது. இறக்கைகள் பக்கத்துக்கு ஒன்ருகச் சிதறின. காற்று அவைகளை அடித்துப் போய் வீட்டுக் கூரைக்கு மேல் போட்டது.

## அத்தியாயம் இரண்டு

### இதிலே இரண்டு குதிரைகள் வருகின்றன

திருகாணி மேஸ்திரி வெற்றுத் தகர டப்பா போலக் கடகடத்தான். ஆனுல் அவனுக்கு வலிக்கவில்லை. இரும்பு மனிதன் ஆயிற்றே! கொஞ்சம் பயந்து போனுன், அவ்வளவுதான். முன்னே ஒரு போதும் அவன் பறந்ததில்லை.

''உண்மையான மாயவித்தைக்காரன் நீ! உயிருள்ள படங்கள் தயாரிக்க என்னுல் கூட முடியாது!'' என்று பென்சிலை மெச்சிப் புகழ்ந்தான்.

''நம்முடையபெட்டிகளுக்கு இனிநாம்எப்படித் திரும்புவது? ''என்று நெற்றியில் இருந்த முழைப் பைத் தடவியபடி பெருமூச்செறிந்தான் அவன்.

''வேண்டவே வேண்டாம்!'' என்று கைகளை உதறினன் திருகாணி மேஸ்திரி. ''அங்கே ஒரே நெரிசல்! இருட்டு! ஓடவும் துள்ளவும் உருளவும் பறக்கவும் நான் ஆசைப்படுகிறேன்! புது விமானம் வரை! நாம் பயணம் செய்வோம்! நீயும் நானும் அசல் விமானங்களைப் பார்ப்போம்! உலகத்தில் இருப்பதை எல்லாம் கண்டு களிப்போம்!''

ஆனல் பென்சிலுக்கு எதனலோ மேற்கொண்டு பறக்க விருப்பம் இல்லை.

''குதிரைகளை வரைகிறேனே'' என்முன்.

வீட்டின் வெள்ளைச் சுவர் மேல் மிக நல்ல இரண்டு குதிரைகளை வரைந்தான் பென்சில். இரண்டுக்கும் மென்மையான சேணங்களும் மினு மினுக்கும் தங்க நட்சத்திரங்கள் உள்ள அழகான கடிவாளங்களும் இருந்தன.

வரைந்த குதிரைகள் முதலில் வால்களை வீசி ஆட்டின. பின்பு மகிழ்ச்சி பொங்கக் கனைத்து, சுவற்றிலிருந்து பிரிந்து வந்தன.

திருகாணி மேஸ்திரி திறந்த வாயுடன் தரை யில் உட்கார்ந்து விட்டான். மட்டு மீறிய வியப் பைக் காட்டும் குறி இது.

''நீ பெரிய வித்தைக்காரன்! நான் என்ன தான் தலை கீழாக நின்றாலும் எனக்கு இப்படி வாய்க்காது!'' என்று கூவினான்.

இந்தப் பாராட்டினால் பென்சிலுக்கு உச்சி குளிர்ந்து போயிற்று. ஆனாலும் அவன் கூச்சத்துடன், ''நாம் புறப்பட நேரம் ஆகி விட்டது. உனக்குப் பிடித்த குதிரை மேல் ஏறிக் கொள்'' என்றான்.

திருகாணி மேஸ்திரிக்கு வெள்ளைக் குதிரை பிடித்தது. ஓவியன் செம்பழுப்புக் குதிரை மேல் ஏறிக் கொண்டான்.

குதிரைகளை ஓட்டிக் கொண்டு இருவரும் புறப்பட்டார்கள்.

## அத்தியாயம் மூன்று

### இதிலே குதிரைகள் பட்டணத்தைச் சுற்றி ஓடுகின்றன

பட்டணத்தில் எல்லாவற்றையும் விட அழகான சதுக்கம் வெயிலொளிச் சதுக்கம். அதிலே நின்று கொண்டிருந்தார் போக்குவரத்தை ஒழுங்கு படுத்தும் மிலீஷியாக்காரர். பல விதமான வண்டிகள் அவரைக் கடந்து வேகமாய்ப் போய் வந்து

கொண்டிருந்தன. பெரிய பேருந்துகள், மின் விசையால் ஓடும் நீண்ட டிராலிபஸ்கள், சின்னச் சவாரிக் கார்கள், இப்படிப் பல வகை. துடி யான மோட்டார் சைக்கிள்கள் பொறுமை இல்லாமல் சடசடத்துக் கொண்டிருந்தன. எல்லா வற்றையும் முந்திக்கொண்டு முன்னே பாய அவை களுக்கு ஆசை.

திடீரென்று மிலீஷியாக்காரர் கூவினர்:

''இது கனவா நினைவா?''

பெரியவையும் சிறியவையுமான இயந்திர வண்டிகள் நெரிந்த விசாலமான நகர வீதியிலே அழகான இரண்டு குதிரைகள் பாய்ந்து வந்து கொண்டிருந்தன. ஒன்று வெள்ளைப் புள்ளிகள் இட்ட செம்பழுப்புக் குதிரை, மற்றது பழுப்புப் புள்ளிகள் கொண்ட வெள்ளைக் குதிரை. அவற் றின் மேல் உட்கார்ந்திருந்தவர்கள், யார் என்று தெரியாத சின்ன மனிதர்கள். அவர்கள் இரண்டு பக்கமும் மாறி மாறிப் பார்வை செலுத்தியபடி, குதூகலம் பொங்கும் ஒரு பாட்டை உரக்கப் பாடிக் கொண்டிருந்தார்கள்:

''சின்னக் குதிரை மேலே வருவேன்,
தின்ன அதற்கு மிட்டாய் தருவேன்.
என்னை ஏற்றிப் போ, குதிரையே,
எனக்கு நடக்க விருப்பம் இலேயே!''

பென்சிலும் திருகாணியும் தாம் அவர்கள்.

அவர்கள் இடப் புறமும் வலப் புறமுமாக மாறி மாறிப் பார்த்துக் கொண்டு வந்தார்கள். குதிரைகளோ, இடது பக்கமும் வலது பக்கமுமாக மாறி மாறித் திரும்பிக் கொண்டிருந்தன. சில வேளைகளில் பாய்ந்து ஓடின, அப்புறம் ஒரு மோட்டாரை முட்டுபவை போலச் சட்டென்று நின்றன.

மிலீஷியாக்காரர் ஊதலை உதடுகளில் வைத்து உரக்கச் சீழ்க்கை அடிக்கத் தொடங்கினுர். எல்லாக் காரோட்டிகளும் திடீரென்று கேட்ட சீழ்க்கையால் திடுக்கிட்டுப் போய், மிலீஷியாக்காரரைப் பார்த்தார்கள். திருகாணியும் பென்சிலும் மட்டுந்தாம் திரும்பிக் கூடப் பார்க்கவில்லை. மிலீஷியாக்காரர்கள் சீழ்க்கை அடிப்பது எதற்காக என்று அவர்களுக்குத் தெரியவே தெரியாதே.

''என்னை ஏற்றிப் போ, குதிரையே,
எனக்கு நடக்க விருப்பம் இல்லையே!''

என்று சேணத்தில் அசைந்தாடியபடித் தொண்டையைப் பிய்த்துக் கொண்டு கத்தினுன் திருகாணி. பென்சில் கீச்சுக் குரலில் கூடப் பாடினுன்:

''எமக்கு நடக்க விருப்பம் இலேயே!''

''ஒழுங்கீனம்!'' என்று எண்ணிக் கொண்டார் மிலீஷியாக்காரர். ''விதிகளே மீறுகிருர்கள்! இடைஞ்சல் செய்கிருர்கள்! சக்கரங்களுக்கு அடியில் மாட்டிக் கொள்ளப் பார்க்கிருர்கள்!''...

மிலீஷியாக்காரரின் பக்கத்தில் நின்றது பெரிய சிவப்பு மோட்டார் சைக்கிள். அவர் அதில் ஏறிக் கொண்டு கோட்டைத் தெருவின் நடு வரை ஓட்டிப் போனுர். தெருவில் போக்குவரத்துச் சிவப்பு அடையாள விளக்கு எரிந்தது.

மோட்டார் வண்டிகளின் பெருக்கு சட்டென்று தேங்கி விட்டது. பேருந்துகளும் டிராலிபஸ்களும் லாரிகளும் சவாரிக் கார்களும் மோட்டார் சைக்கிள்களும் சைக்கிள்களும் அங்கங்கே நின்று விட்டன.

எல்லாம் நின்று விட்டாலும் திருகாணியும் பென்சிலும் மட்டும் கவலே இல்லாமல் மேலே போனுர்கள். போக்குவரத்து அடையாள விளக்குகள் பற்றி அவர்களுக்கு ஒன்றுமே தெரியாதே.

''தயை செய்து நில்லுங்கள்!'' என்று கண்டிப்பாகச் சொன்னுர் மிலீஷியாக்காரர்.

''ஓகோகோ! சங்கடத்தில் மாட்டிக் கொண்டு விட்டோம் போலிருக்கிறதே...'' என்று கிசுகிசுத்தான் பென்சில்.

மிலீஷியாக்காரரையும் விதிகளை மீறியவர்களையும் சுற்றிச் சின்னக் கூட்டம் கூடிற்று.

''இவர்கள் சர்க்கஸ்காரர்களாய் இருப்பார்கள்!'' என்றான் ஒரு பையன்.

''உங்களுக்கு என்ன நேர்ந்தது, தம்பிமாரே? ஒழுங்கை ஏன் குலைக்கிறீர்கள்? நீங்கள் வசிக்கும் இடம் எது?'' என்று கேட்டார் மிலீஷியாக்காரர்.

''நாங்களா?.. நாங்கள் பெட்டியில் இருந்தோம்...'' என்று அச்சத்துடன் சொன்னான் திருகாணி.

''அது என்ன, ஊரின் பெயரா? என்ன பட்டி?''

''பட்டி இல்லை, பெட்டி. உண்மையான பெட்டியில் இருந்தோம் நாங்கள்...''

''தலைகால் புரியவில்லை!'' மிலீஷியாக்காரர் கைக்குட்டையை எடுத்து நெற்றியைத் துடைத்துக் கொண்டார். ''இதோ பாருங்கள், தம்பிகளா. கேலிப் பேச்சுக்கு எனக்கு நேரம் இல்லை. போக்குவரத்து விதிகளைக் கண்டிப்பாகக் கடைப்பிடியுங்கள்'' என்றார்.

''விதிகள் என்றால் என்ன?'' என்று கேட்க வாயெடுத்தான் ஆவல் உள்ள பென்சில். ஆனால் திருகாணி சரியான நேரத்தில் அவனுடைய சட்டைக்`கையைப் பிடித்து இழுத்தான். இந்த

மாதிரிக் கேள்வியை மிலீஷியாக்காரரிடம் கேட் கலாமா எங்காவது?

போக்குவரத்து அடையாள விளக்கு பச்சை யாக எரிந்தது. பேருந்துகளும் டிராலிபஸ்களும் லாரிகளும் மோட்டார் சைக்கிள்களும் சைக்கிள் களும் புறப்பட்டு ஓடின.

''எல்லாம் குதிரைகளால் வந்த வினே. பட்ட ணத்தில் காரில் தான் போக வேண்டும்'' என் முன் திருகாணி மேஸ்திரி.

## அத்தியாயம் நான்கு

### இதில் தலையணைகள் பொருத்திய சக்கரங்கள் உருளுகின்றன

''ஒரு காரின் படம் வரைகிறேனே'' என்ருன் பென்சில்.

''காரை வரைவது லேசு என்று எண்ணு கிருயோ? உனக்கு வாய்க்கவே வாய்க்காது. ரொம்ப நல்ல 'அமைப்பாளன்' பெட்டி கிடைத் தால்தான் நான் கூடக் கார் தயாரிக்க முடியும். சாதாரண ஸ்கூட்டர் வேண்டுமானுல் தயாரிக்க லாம், ஆனுல் சக்கரங்களுக்கு எங்கே போவது?..'' என்று சொன்னுன் திருகாணி மேஸ்திரி.

''ஏன் வாய்க்காது? நான்தான் நிறையக் கார்களைப் பார்த்திருக்கிறேனே!'' என்முன் பென்சில்.

''சரி, வரை காரின் படத்தை'' என்று இசைந்தான் திருகாணி மேஸ்திரி. ''ஆனல் ஒன்று. சக்கரங்களில் டயர்கள் வரைய மறந்து விடாதே. அவைகள் இல்லாவிட்டால் கார்கள் சாலையில் நிரம்பக் கடகடக்கும். எனக்கோ, கடகடப்பைத் தாங்க முடியாது. அப்போது என் திருகாணிகள் எல்லாம் கழன்று கொள்ளும். டயர்கள் தலையணைகள் மாதிரி மெத்தென்று இருக்கும், சுகமாகக் காரில் போகலாம்.''

''கவலைப்படாதே! மெத்தென்று இருக்கும்!'' என்முன் வேலையில் முனைந்திருந்த பென்சில்.

அவன் வெள்ளைச் சுவர் மேல் காரின் படத்தை வரைந்து கொண்டிருந்த போது திருகாணி மேஸ்திரி மாயக் குதிரைகளைப் பக்கத்துத் திடலுக்கு ஓட்டிப் போய், புல் தரையில் விட்டு, உயரமற்ற இரும்பு வேலியில் கட்டிப் போட்டான்.

திரும்பியதும் அவன் படத்தைப் பார்வையிட்டான். பென்சிலுக்கு ஏதாவது யோசனை சொல்லலாம் என்று அவன் நினைத்தான். ஆனல் அதற்குள் பென்சில் வேலையை முடித்து விட்டான்.

''ஆயிற்று!''

பக்கத்தில் நின்றது உண்மையான கார்.

''என்ன நீ இப்படிப் பண்ணி விட்டாய்? சக்கரங்களில் தலையணைகளை எதற்காக வரைந்தாய்?'' என்று கூச்சல் போட்டான் திருகாணி.

மெய்யாகவே புதிய காரின் சக்கரங்களில் கட்டி இருந்தன தலையணைகள். அசல் தலையணைகள்! ரோஜா நிற உறைகள் போட்டு வெள்ளை நாடாக்களால் இறுக்கப்பட்டவை. பென்சில் அவைகளை மிக நன்றாக வரைந்திருந்தான்.

''தலையணைகளைப் பற்றி நீயேதான் எனக்குச் சொன்னாய்'' என்றான் பென்சில்.

''நான் சொல்லவில்லை!''

''சொன்னாய், சொன்னாய்!''

''எல்லாவற்றையும் நீ குழப்பி விட்டாய்! இப்போது உன் காரால் ஓட முடியாது!''

''முடியும்!'' என்று மனத்தாங்கலோடு அழுத்திச் சொன்னான் பென்சில்.

''முடியாது, அது நகராது! உன்னை விட எனக்கு நன்றாகத் தெரியும்!''

''போகும், பாரேன்!''

''நகரவே நகராது என்கிறேன்!''

''நீ உட்கார்ந்து தான் பாரேன்!''

''தாராளமாக உட்காருகிறேன், ஆனால் இது நகராது!''

திருகாணி காரில் பென்சிலுக்குப் பக்கத்தில்

உட்கார்ந்தான். கார் ஹாரன் அடித்துப் புறப் பட்டது.

''போகிறது! போகிறது!'' என்று ஆர்ப்பரித் தான் பென்சில்.

வியப்பு அடைந்த திருகாணி இரண்டு கைகளா லும் செலுத்து சக்கரத்தை இறுகப் பிடித்துக் கொண்டான். காரிலிருந்து துள்ளி வெளியே விழுந்து விடுவோமோ என்று அவனுக்கு ஒரே பயம். அக்கம் பக்கம் பார்க்கவே அவனுக்கு நேரம் இல்லை. ஆனாலும் சாலையில் நடந்தவர் கள் தங்களைத் திரும்பிப் பார்த்து விரல்களால் சுட்டிக் காட்டியதை அவன் கண்டு கொண் டான்.

''எவ்வளவு வேடிக்கையான கார், தலையணை களும் சக்கரங்களுமாக!'' என்றார்கள் வழி நடந்த வர்கள்.

## அத்தியாயம் ஐந்து

### இதில் பயணம் தொடர்கிறது

நம்முடைய சின்னப் பயணிகள் நகரத்தில் வெகு நேரம் காரில் போக முடியவில்லை.

அப்புறம் என்ன நடந்தது என்று கேளுங்கள்.

பெரிய டமாரம் போல இருந்த ஒரு விந்தை யான காரை வழியில் கண்டான் பென்சில். அது சாலையில் மெதுவாக ஊர்ந்து கொண்டிருந்தது. ஆனால் அதற்கு அடியில் சாலை என்ன காரணத் தாலோ மற்ற இடங்களைப் போல் இல்லாமல் கன்னங்கறேல் என்றும் ஒரே மழமழப்பாகவும் இருந்தது. நெடியுள்ள சூடான புகை சாலை யிலிருந்து கிளம்பிக் கொண்டிருந்தது. மற்றக் கார்கள் எல்லாம் அந்தக் கறுப்புக் காரையும் அதன் பின்னே இருந்த விசித்திரமான சாலையை யும் ஒரு புறம் விட்டு ஒதுங்கிப் போக முயன்றன.

திருகாணியோ, வழக்கத்துக்கு மாறான அந்தக் காரைக் கண்டு மகிழ்ச்சி அடைந்தான்.

''இந்தக் காரை இதோ முந்துவோம்! இல்லா விட்டால் எல்லாரும் நம்மை முந்துகிறார்கள், நம்மாலோ, யாரையும் முந்த முடியவில்லை...''

இப்படிச் சொல்லிக் கொண்டே தன் காரைக் கறுப்புச் சாலையில் சாமர்த்தியமாகச் செலுத்தி னான்.

''டர்ர்ர்ர்!''

மென்மையான ரோஜா நிறத் தலையணை உறை கள் சூடான கீலோடு ஒட்டிக்கொண்டு கிழிந்து விட்டன.

சக்கரங்களுக்கு அடியிலிருந்து மெல் இறகுத் தூவி பறந்தது. காற்று அதை அடித்துப் போய் நகரத்தில் கார்கள் மேலும் கட்டிடங்கள் மேலும் மரங்கள் மேலும் சிதறியது.

பென்சிலும் திருகாணியும் ஏறியிருந்த காரோ, பிய்த்துக் கொண்டு முன்னே பாய்ந்தது. மென்மையான ரோஜா நிறத் துணித் துண்டுகள் கீல்பூசிய சாலையில் ஒட்டிக் கொண்டிருந்தன.

வீதி முடிந்தது. முன்னே இருந்தது அகலமான சதுக்கம். அதில் கீல் பூசி இருக்கவில்லை, உருளைக் கற்கள் பாவி இருந்தன.

சிறு காரின் சக்கரங்கள் காதைத் துளைக்கும்படிக் கடகடத்தன. அக்கம் பக்கமாகவும் முன்னேயும் பின்னேயும் துள்ளிக் குதித்துத் தூக்கித் தூக்கிப் போட்டது கார்.

திருகாணி செலுத்து சக்கரத்தில் மூக்கை இடித்துக் கொண்டான். பென்சிலோ, மெத்தென்ற இருக்கையில் பந்துபோலத் துள்ளினன்.

''ந்ந்ன் க்க்க்க் ன்ற் ப்வ்ன்'' என்று உளறிக் கொட்டினன் திருகாணி.

''நான் அக்கு அக்காகக் கழன்று போவேன்'' என்பதுதான் அவன் சொல்ல விரும்பியது. ஆனுல் ஒரேயடியாகத் தூக்கித் தூக்கிப் போட்டதால்,

பாவம், ஒரு சொல் கூடச் சரியாகப் பேச அவனுக்கு முடியவில்லை.

''ந்த்க்ல்க்ல் ன்றம்ப்ர்ல்லே'' என்று குழற்றினான் பென்சில்.

அவன் சொல்ல வந்தது, ''இந்தக் குலுக்கலில் ஒன்றுமே எனக்குப் புரியவில்லை'' என்பதாகும்.

''ச்க் ந்றத் ச்ர்ப்ண்ட்ம்'' என்று சொன்னான் திருகாணி.

''சீக்கிரம் நிறுத்திச் சரியான டயர்கள் மாட்ட வேண்டும்'' என்று அவன் சொன்னதுதான் அப்படிக் கேட்டது.

## அத்தியாயம் ஆறு

### இதில் வேனியா காஷ்கின் கொள்ளைக்காரர்களின் படங்களை வரைகிறான்

அந்த நேரத்தில் திடலுக்கு வந்தார்கள் சில சிறுவர்கள். அவர்கள் சண்டைக் கோலத்தில் இருந்தார்கள். எங்கேயோ ஓடினார்கள், கூச்சல் போட்டார்கள், அசல் மர வாள்களை வீசினார்கள், அசல் விளையாட்டுக் கைத்துப்பாக்கிகளை

ஆட்டினார்கள். துணிச்சல் உள்ள கொள்ளைக் காரர்கள் நகரத்தைத் தாக்குவது போல இருந்தது அவர்கள் போட்ட கூப்பாடு.

''ஹுர்ரே! அடி! நொறுக்கு! விடாதே! டுமீல்! டமார்!'' என்று ஆரவாரித்தார்கள் பையன்கள்.

நம்முடைய சின்னப் பயணிகள் திகில் கூட அடைந்தார்கள். வேறு எங்கேயாவது திரும்பலாம் என்று பார்த்தார்கள். ஆனால் கார் நேரே பையன் களின் பக்கம் போயிற்று.

எதிரே ஓடி வந்தான் சணல் முடியனான ஒரு பையன். அவனுடைய கண்களை மறைத்திருந்தது கொள்ளைக்கார முகமூடி. கறுப்புத்தாளால் செய்த அசல் முகமூடி. திரைப்படங்களிலும் களியாட்டங் களிலும் அந்த மாதிரி முகமூடியைப் பார்க் கலாம்.

''வாருங்கள் என் பின்னே! ஏறுங்கள் குதி ரைகள் மேல்!'' என்று கத்தினான் சிறுவன். ஆனால் குதிரைகளைத்தான் காணோம். பைய னுக்கு உத்தரவிடுவதில் ஆசை என்பது தெரிந் தது.

வேகமான ஓட்டத்தால் அவனுடைய முகமூடி பக்கவாட்டில் விலகி இருந்தது. அது கண்களை மூடி, பார்வையைத் தடுத்தது. அதனால் தானோ என்னவோ சணல் முடியன் திருகாணி மேஸ்திரி

யின் காரில் முட்டிக் கொண்டு தரையில் குப்புற விழுந்தான்.

கார் கிரீச்சிட்டு, துண்டு துண்டாகச் சிதறி விட்டது. சக்கரங்கள் மூலைக்கு ஒன்ருக உருண்டு ஓடின.

''விபத்து!'' என்று தரையில் உட்கார்ந்தபடி சொன்னுன் பையன்.

சிறுவர்கள் ஓசையுடன் மூச்சு விட்டுக் கொண்டு நின்று விட்டார்கள்.

''இவ்வளவு அருமையான, இவ்வளவு நல்ல காரை உடைத்து விட்டீர்களே!'' என்று கோபத்தோடு சொன்னுன் திருகாணி. இப்போது குலுக்கல் நின்று விட்டதால் அவனுல் சரியாகப் பேச முடிந்தது.

''நாங்கள் உடைக்கவில்லை. எங்கள் கொள்ளைக் கூட்டத் தலைவன் வேனியா காஷ்கின் தற்செயலாகக் கார் மேல் விழுந்து விட்டான்'' என்ருர்கள் பையன்கள்.

''உடைக்கவில்லையாம்...'' என்று கோரணி காட்டினுன் மேஸ்திரி. ''அப்படியானுல் தடிகளைப் பயங்கரமாக ஆட்டிக் கொண்டு எதற்காக எங்கள் மேல் பாய்ந்தீர்கள், கூச்சல் போட்டீர்கள்? காரை உடைக்க வேண்டும் என்று திட்டமிட்டுத் தானே?''

''இவை தடிகள் அல்ல! வாட்கள். நிஜமான வாட்கள். நாங்கள் கொள்ளைக்காரர்களும் உளவாளிகளும் என்ற விளையாட்டு ஆடுகிறோம். வேனியா எங்கள் தலைவன்...'' என்று ரோசத்துடன் சொன்னார்கள் சிறுவர்கள்.

தெரியாத சொற்கள் காதில் பட்டதும் பென்சில் கூர்ந்து கேட்டான். ஆவல் உள்ள கலைஞனை அவன் உடைந்த காரைக் கூட மறந்து விட்டான்.

''என்ன சொன்னீர்கள், கொள்ளைக்காரர்களும் உளவாளிகளுமா?'' என்று கேட்டான்.

''ஆமாம். எங்கள் வீட்டு முகப்பில் எல்லாப் பையன்களும் இந்த விளையாட்டை ஆடுகிறார்கள்.''

''கொள்ளைக்காரர்கள், உளவாளிகள் என்றால் யார்?'' என்று வெகுளித் தனமாகக் கேட்டான் பென்சில்.

''ஸ்ஸ்யூ!..'' என்று சீழ்க்கை அடித்தான் வேனியா காஷ்கின். ''இந்த அற்ப விஷயம் கூடவா தெரியாது? புத்தகங்கள் படிக்க வேண்டும்...''

''கொள்ளைக்காரர்களையும் உளவாளிகளையும் தயவு செய்து படம் போட்டுக் காண்பியுங்கள், நான் அவர்களைப் பார்க்கிறேன்'' என்று வேண்

டினுன் சிறு ஓவியன். உலகத்தில் எல்லாருக்கும் படம், வரையக் கட்டாயம் தெரிந்திருக்கும் என்று அவன் எதனுலோ உறுதியாக நம்பினுன். ''இவர் கள் ரசமான பேர்வழிகளாய் இருப்பார்கள், ஆனல் இவர்களைப் பற்றி எனக்கு ஒன்றும் தெரியாது. கார்களை நான் பார்த்து விட்டேன். ஆனல் கொள்ளைக்காரர்களையும் ஒற்றர்களையும் இன்ன மும் பார்க்கவில்லை. எல்லாவற்றையும் தெரிந்து கொள்வது எனக்கு அவசியம். படம் போட்டுக் காட்டுங்களேன்!''

''அழகுதான், படம் போட்டுக் கொண்டு இருக்கப் போகிறேனு நான்? ஏற்கெனவே எனக்கு நேரம் போதவில்லை'' என்று சிடுசிடுத்தான் வேனியா காஷ்கின்.

''படம் போடு, வேனியா. கடல் கொள்ளைக் காரனையும் உளவாளியையும் வரைந்து காட்டு'' என்று சொன்னுர்கள் சிறுவர்கள்.

''என்னுடைய தூரிகையையும் வண்ணங்களை யும் எடுத்துக் கொள்ளுங்கள்'' என்று சொல்லி, வண்ணங்கள் இருந்த பெட்டியையும் துப்புரவான வெள்ளைக் காகிதத்தையும் மென்மையான அழிக் கும் ரப்பரையும் பையிலிருந்து எடுத்தான் பென் சில்.

''நல்லது, எல்லோரும் கேட்கிறீர்கள் என்ருல் அப்படியே செய்கிறேன், வரைகிறேன்'' என்று இசைந்தான் வேனியா காஷ்கின்.

வண்ணங்களே வாங்கிக் கொண்டு, முகமூடியை அகற்றி விட்டுப் படம் வரையத் தலைப்பட்டான்.

முதலில் காகிதத்தின் மேல் தோன்றியது பெரிய கறுப்புக் கறை. மயிரைச் சிலுப்பிக்கொண்டு நிற்கும் சடை நாய் போல் இருந்தது. தூரிகையிலிருந்து தற்செயலாகச் சொட்டின வண்ணத் துளி அது. அப்புறம் சணல் முடிச் சிறுவன் நம்ப முடியாத பயங்கரமான படங்களே வரைந்தான்.

முதல் படத்தில் இருந்தான் கொடூரமான முகத் தோற்றம் உள்ள செம்பழுப்புத் தாடிக் காரன். கோடுகள் போட்ட மாலுமிச் சட்டையும் மாலுமிக் கோட்டும் அணிந்திருந்தான். கொள்ளேக் காரர்களின் கறுப்புக் கொடியைக் கையில் பிடித் திருந்தான். மண்டையோடும் இரண்டு எலும்பு களும் அதில் வரையப்பட்டிருந்தன. மிகப் பெரிய வளேந்த கட்டாரியும் கொள்ளேக்காரர்களின் பயங்கரமான இரண்டு கைத்துப்பாக்கிகளும் அந்த ஆளின் இடைவாரில் துருத்திக் கொண் டிருந்தன. அவன் பக்கத்தில் இன்ஞெருவன் நின்று

கொண்டிருந்தான். இந்த மனிதன் மாட்டியிருந்த மழைக்கோட்டின் கழுத்துப் பட்டை தூக்கி விடப் பட்டிருந்தது. இவன் கறுப்பு முகமூடி அணிந் திருந்தான். இவனுடைய நீண்ட மூக்கைப் பார்க் கவே அருவருப்பாய் இருந்தது.

தாடி வைத்த கடல் கொள்ளைக்காரன் கறுப்புக் கொடியை ஆட்டிக் கொண்டிருந்தான். மற்றவன் சந்தேகம் இல்லாமல் உளவாளி. கறுப்பு முகமூடியில் இருந்த துளைகளின் வழியாக எல்லாரையும் கொடுமையாகப் பார்வை இட்டுக் கொண்டிருந்தான் அவன்.

''இவன் கடல் கொள்ளைக்காரன். இந்த ஆள் உளவாளி'' என்று விளக்கினன் வேனியா.

''அருமை! அப்படியே அசல் மாதிரியே!'' என்று பாராட்டினர்கள் பையன்கள்.

''கோரம்!..'' என்று வாய்க்குள் சொல்லிக் கொண்டான் திருகாணி மேஸ்திரி.

பென்சில் நடுங்கினன். ''ஐயோ, எவ்வளவு பயங்கரம்! இந்த மாதிரி அச்சமூட்டும் படங் களை நான் ஒருபோதும் வரைய மாட்டேன்'' என்ருன்.

''ஹா!'' என்று நொடித்தான் வேனியா. ''என்னை மாதிரி உனக்குப் படம் வரையத் தெரியாது, அவ்வளவுதான்!''

''எனக்கா தெரியாது?'' என்று ரோசத்துடன் கேட்டான் பென்சில். (கலைஞர்கள் பெரிய ரோசக் காரர்கள்.)

''பென்சிலுக்கா வரையத் தெரியாது?'' என்று தன் சுருள் கம்பிகளைக் கிலுக்கினான் திரு காணி.

சின்ன ஓவியன் அக்கணமே படம் வரையத் தொடங்கி விட்டான் என்பதை நான் சொல்லா மலே நீங்கள் புரிந்து கொள்வீர்கள். உண்மை யான ஓவியர்கள் எப்படி வரைகிறார்கள் என் பதை இந்த வேனியா காஷ்கின் பார்க்கட்டும்!

வேனியா படத்தின் மேல் கண்ணோட்டி விட்டு, ''ஏ, இது எங்களுக்குத் தெரியும்! இங்கே ஒரு புள்ளி, அங்கே ஒரு புள்ளி, இரண்டு கொக்கி கள், சின்ன மூக்கு, சின்ன வாய்...'' என்றான்.

''இரண்டு கொக்கிகளும் இல்லை, ஒன்றும் இல்லை. சிறுவன் படமாக்கும் வரைகிறேன்'' என்று சொன்னான் பென்சில்.

''போவோம், தம்பிகளா. இவர்களோடு பேசிக் கொண்டிருக்க நமக்கு நேரம் இல்லை. வாருங் கள் என் பின்னே!'' என்று அதட்டினான் வேனியா.

பையன்கள் வாட்களை வீசியபடி அவன் பின் னால் ஓடி விட்டார்கள். ஒரு சின்னப் பையன் மட்டும் தெருவில் இருந்தான்.

*அவன் எந்தப் பையன் என்று கேட்கிறீர்களா? மாய ஓவியனுன பென்சில் வரைந்தானே, அதே சிறுவன்தான்.*

*அடாடாடா, பென்சில்! இந்த மாதிரிப் பொறுப்பு இல்லாமல் நடந்து கொள்ளலாமா எங்கேயாவது? உண்மையான பையனை வரைந்து விட்டாயே! அப்புறம் என்ன ஆவதாம்? பையனை யார் வளர்ப்பார்கள்? யார் அவனைக் கவனித்துக் கொள்வார்கள், அவனுக்கு உணவு ஊட்டுவார்கள், துணி மணிகள் உடுத்துவார்கள்? அடாடாடா!..*

**பையன் உட்கார்ந்து கண்களைக் கொட்டினுன்.**

## அத்தியாயம் ஏழு

### இதில் ஒரு வீடு கட்டப்படுகிறது

**''உன் பெயர் என்ன?'' என்று மாயப் பையனிடம் கேட்டான் பென்சில்.**

**சிறுவன் பதில் சொல்லவில்லை.**

**''உன் குலப் பெயர் என்ன?''**

**பையன் பேசாதிருந்தான். கையை உயர்த்தி, விரல்களால் உதடுகளை மேலிருந்து கீழாகத் தடவினுன். அப்போது ''ப்ர்பிம்'' என்ற வேடிக்கை**

யான ஒலி அவனிடமிருந்து வந்தது. சிறுவனுக்கு அது பிடித்துப் போயிற்று. அவன் மறுபடி உதடு களைத் தடவி. ''ப்ர்ரிம்! ப்ர்ரிம்! ப்ர்ரிம்!'' என்று ஒலித்தான்.

''நீ யார்?'' என்று பையனைத் தொட்டான் திருகாணி.

''ப்ர்ரிம்! ப்ர்ரிம்! ப்ர்ரிம்!'' என்று ஒலி செய்து விளையாடினான் பையன்.

''இவன் பரம்!'' என்றான் பென்சில். ''உன் காதில் படவில்லையா? நான் பரம்? ''என்கிறானே.''

''உண்மை தான், பரம், அதாவது பரமன். நிரம்ப நல்லது!.. பரமா, எங்களோடு பயணம் செய்ய வருவாயா?'' என்று சந்தோஷத்துடன் கேட்டான் திருகாணி.

சின்னப் பயல் பரமனுக்குத் தெரியாது பய ணம் என்றால் என்ன என்பது. தெரிந்திருந்தால் கட்டாயம் இசைந்திருப்பான். திருகாணிக்கு அவன் பதில் எதுவும் சொல்லவில்லை, ஆனால் அவன் பக்கத்தில் போய் அவனுடைய காலைப் பிடித் தான். திருகாணி விழத் தெரிந்தான்.

''இந்தா, தயவு செய்து சேட்டை பண் ணாதே!'' என்று அதட்டினான் திருகாணி.

சிறுவன் மறுபடி ''ப்ர்ரிம்! ப்ர்ரிம்! ப்ர்ரிம்!'' என்று உதடுகளால் ஒலித்தான்.

''இவனுக்குப் பேசக்கூட வரவில்லை! இவனை வைத்துக் கொண்டு என்னதான் செய்யப்போ கிறேமோ?'' என்று அங்கலாய்த்தான் இரும்பு மனிதன்.

திடீரென்று திருகாணியின் உச்சி மண்டை மேல் டிங்கென்று சொட்டியது ஒரு துளி. சாதா ரணமான மழைத் துளி.

''ப்ப்ர்ர், மழை பெய்யப் போகிறது!'' என்று நடுங்கினுன் திருகாணி.

நகரின் மேலே கவிந்தது கரு மேகம். வழிப் போக்கர்கள் மேகத்தை அச்சத்தோடு பார்த்து, கோட்டுக் கழுத்துப்பட்டைகளைத் தூக்கி விட்டுக் கொண்டு வீட்டு வாயில்களுக்கும் கடைகளுக்கும் டிராலிபஸ்களுக்குமாக ஆளுக்கு ஒரு பக்கம் ஓடி மறைந்து கொண்டார்கள். சாலைப் போக்கு வரத்தை ஒழுங்குபடுத்திக் கொண்டிருந்த மிலீ ஷியாக்காரர் மட்டுந்தான் எங்கும் ஓடவில்லை. சதுக்கத்தின் நட்ட நடுவில் கலங்காமல் நின்று கொண்டிருந்தார். மிலீஷியக்காரர்கள் மழைக்கு அஞ்சுவதில்லை.

''மழை! மழை!'' என்று மகிழ்ச்சிக் கூச்சல் போட்டார்கள் சின்னப் பையன்கள். ''மழை! ம-அ-ழை!'' என்று பாடினுர்கள்.

இடி இடித்தது. மழை பெய்தது. அடை

மழை அல்ல, வெதுவெதுப்பான மழை, ஆனு லும் நனைத்து விட்டது.

''பையனுக்கு உடம்புக்கு வந்து விடலாம்! அவன் தொப்பலாக நனைந்து விடலாம்! அவ னுக்குத் தடிமல் பிடிக்கலாம்!'' என்று கத்தினன் திருகாணி.

பென்சிலும் திருகாணியும் பரமனைக் கையில் பிடித்துக் கொண்டு மரச்சாலைக்கு ஓடிச் செடி களில் மறைந்து கொண்டார்கள்.

''சட்டச் சடசட்! சட்டச் சடசட்!'' என்று பெய்த மழை புற்களைத் தரையோடு தரையாக அழுத்திற்று.

ஆனால் கொஞ்ச நேரத்தில் மேகம் தன் கந்தல் விளிம்புகளை ஆட்டிக் கொண்டு அப்பால் போய் விட்டது. சூரியன் மழையை முறைத்துப் பார்த்தது. மழைத் தூறல் உடனே நின்று விட்டது.

திருகாணி வெளியே பார்த்தான்.

''இந்தப் பாழும் மழை ஓய்ந்ததா ஓய வில்லையா?'' என்று கேட்டான்.

''ஓய்ந்து விட்டது, வெளியே வா!''

''மறுபடி பெய்தாலோ?''

''பெய்யாது.''

''ஒரே பயம் எனக்கு மழையிடம். அசல் கூரை

உள்ள எதையாவது வீட்டை வரையேன், தயவு செய்து. ஐயோ!..'' என்று வீரிட்டான் திருகாணி. பென்சிலோ, கெக்கலி கொட்டிச் சிரித்தான்.

பளிச்சிட்ட ஒரு பெரிய துளி மரக் கிளையில் நெடு நேரம் தொங்கிக் கொண்டு இருந்து விட்டு, பராக்குப் பார்த்துக் கொண்டிருந்த திருகாணியின் மூக்கில் டங்கென்று சொட்டிற்று.

அவன் உடனே பதுங்கிக் கொண்டான்.

''வீடு தயாராகிற வரையில் வெளியே வர மாட்டேன்!'' என்றான்.

செடிகளுக்கு அடியில் பரப்பி இருந்த மஞ்சள் மணல் மேல் வீட்டின் படத்தை வரைந்தான் பென்சில்.

ஆமாம், கட்டவில்லை, வரைந்தான். இதில் ஆச்சரியப்படுவதற்கு ஒன்றும் இல்லை. ஒவ்வொரு கட்டிடமும் முதலில் வரையத்தான் படுகிறது, அதாவது காகிதத்தில். அப்புறந்தான் அது கட்டப்படுகிறது.

வீட்டின் முகட்டில் கடைசி ஓட்டை வரைந்த பின், ''தயார்!'' என்றான் பென்சில்.

திருகாணி மறைவிடத்திலிருந்து வெளியே பாய்ந்தான்.

எல்லாம் கதையில் வருவது போலவே இருந்

தது! உயரமான கூரை உள்ள புது வீடு அவர்களுக்கு முன்னே காணப்பட்டது.

''அருமை!'' என்று பாராட்டினன் திருகாணி. ''ஆனல் நீ எதற்காகக் கிணற்றை வரைந்தாய்? குழாய் அல்லவா வரைந்திருக்க வேண்டும்...''

மெய்யாகவே வீட்டின் பக்கத்தில் இருந்தது அசல் கிணறு. நீர் இறைப்பதற்கான வாளி அதற்கு மேலே தொங்கிற்று. பென்சிலுக்குக் குழாய் வரையத் தெரியவில்லை, ஆனல் கிணறு அருமையாக வாய்த்திருந்தது.

''குழாய் என்றல் என்ன என்பது எனக்குத் தெரியாது'' என்று பெருமூச்சு விட்டான் பென்சில். ''நான் என் வாழ்நாளில் வரைந்தது ரொம்பக் கொஞ்சந்தானே...''

''அட பரவாயில்லை'' என்று தேற்றினன் திருகாணி. ''அப்புறம் சொல்லித்தருகிறேன். முதலில் பரமனை ஈரம் போகத் துடைக்க வேண்டும். அவன் தொப்பலாக நனைந்து போய் விட்டான்... ஐயோ, எங்கே அவன், பரமன்? பரமா, ஊம், வா இங்கே!''

திருகாணி கிளைகளை விலக்கிச் செடிகளுக்கு அடியில் துழாவினன். ஆனல் பரமனை எங்குமே காணேம். பரமன் தப்பி ஓடி விட்டான்!

''பார்த்தாயா, இப்படி நடக்கும் என்று எனக்குத் தெரியும். உன்னை நம்பிச் சின்னப் பையனை ஒப்படைக்கவே கூடாது'' என்று கலவரப்பட்டான் திருகாணி. ''பரமனைக் கண்டுபிடிக்க வேண்டும். காருக்கு அடியில் அகப்பட்டுக் கொள்ளலாமே அவன்! ரொம்பச் சின்னவன் ஆயிற்றே!..''

## அத்தியாயம் எட்டு

### இதில் கப்பல்கள் பயணம் செய்கின்றன

மழை பெய்து விட்ட பின் நகரம் எவ்வளவு அருமையானது ஆகி விடுகிறது என்பதை நீங்கள் எப்போதாவது கவனித்திருக்கிறீர்களா? வீதிகளில் நீர்ப் பெருக்குகள் சலசலவென்று ஓடும். வெறுங் கால்களோடு அவற்றில் சளப்பிட்டபடி நடப்பது நன்ருக, இன்பமாக இருக்கும். நாலா பக்கமும் நீர்த் துளிகள் பளபளக்கும். கார்கள் குட்டங்களில் நீரை இறைத்தபடி ஓடும். வெயில் வட்டங்கள் நகரம் முழுவதிலும் தண்ணீரில் பிரதிபலிக்கும். பையன்கள் ஓடும் நீருக்குப் போட்டியாக ஓடி, அதை முந்தப் பார்ப்பார்கள். மழை நின்று விட்டது! மழை!..

பரமன் சின்னப் பிள்ளைகளோடு சேர்ந்து

ஓடினான். அவன் கலகலவென்று நகைத்தான். தண்ணீரில் கால்களால் தொப்புத் தொப்பென்று அடித்தான். அவனுடைய புதிய செருப்பு கையால் செய்த படகு போல அலைகள் மேல் அசைந்தாடிக் கொண்டு நீரில் மிதந்து போயிற்று. பரமன் அதன் பின்னே ஓடினான்.

எல்லா வீதிகளிலும் கப்பல்கள் மிதந்து கொண்டிருந்தன. காகிதக் கப்பல்கள், பலகைக் கப்பல்கள், பாய்மரக் கப்பல்கள், சாவி கொடுத்தால் போகும் கப்பல்கள் என்று வகை வகையானவை. மெல்லிய பாய்மரங்கள் நாட்டிய வெறும் சிம்புகள் கூட மிதந்து கொண்டு போயின. பையன்களும் பெண்களும் நெடுந்தூரப் பயணத்துக்கு அனுப்பின நூற்றுக் கணக்கான கப்பல்கள்.

''கப்பல்கள்! கப்பல்கள்!'' என்று ஆரவாரித்தார்கள் பையன்கள்.

''கப்பல்கள்!'' என்று கீச்சுக் குரலில் திடீரென்று கூவினான் பரமன்.

உங்கள் ஊரில் எப்படியோ, எனக்குத் தெரியாது, ஆனால் இந்த நகரத்தில் ஒவ்வொரு தரமும் மழை பெய்து நின்ற பிறகு வீதிகளில் கப்பல்கள் போகும். இன்றைக்கோ, அவை வழக்கத்தை விட நிறைய இருந்தன.

வீதியில் போனவர்கள் தங்களுக்குள் பேசிக்

கொண்டார்கள்: ''இன்றைக்கு ஏன் கப்பல்கள் இத்தனை அதிகமாய் இருக்கின்றன?''

''அடே, உங்களுக்குத் தெரியாதா என்ன? எங்கள் ஊரில் கப்பல்களின் பெரிய போட்டி நாளைக்கு நடக்கப் போகிறது.''

''அப்படியா, எங்கே?''

''மிருகக் காட்சிசாலையில் இருக்கிறதே, அன்னக் குளம், அதிலே! என் மகன் இளம் தொழில் வினைஞன். அவன் போட்டியில் கலந்து கொள்வான்.''

கார்கள் கப்பல்களுக்கு வழி விட்டன. நாற் சந்திகளில் விரைவாக வந்த கப்பல்களை முன்னே போக விடுவதற்காக மிலீஷியாக்காரர்கள் வண்டிப் போக்குவரத்தை நிறுத்தினார்கள்.

பரமனுக்கு மகிழ்ச்சி தாங்கவில்லை. ''சளப்! பளப்! பளாப்!'' என்று கத்திக் கொண்டு குதித்தாடினான்.

பக்கத்தில் ஓடினான் வேனியா காஷ்கின். அவனும் சிரித்துக் கொண்டிருந்தான். ஆனால் தானே ஒரு கப்பல் தயாரிக்க அவனுக்கு விருப்பமில்லை. ஓடிக் கொண்டே பரமனுடைய செருப்பின் மேல் கற்களை எறிந்தான்.

''பீரங்கிப் படை, சுடுக!'' என்று ஆணை இட்டான்.

கற்கள் ஒன்றன் பின் ஒன்ருகப் பறந்தன.

கடைசியில் ஒரு கல் செருப்புக் கப்பலேத் தாக்கிற்று. அலே அதன் மேல் அடித்தது. அது மூழ்கி விட்டது.

''புளு-புளு!'' என்று கோரணி காட்டின வேனியா வேருெருவனுடைய காகிதப் படகைத் தாக்கத் தலேப்பட்டான்.

அந்த நேரத்தில் பென்சிலும் திருகாணியும் வீதிக்கு வந்தார்கள். பரமனேக் கண்டு கொண்டு கைகளே ஆட்டினுர்கள், கத்திஞர்கள், அவனேப் பிடிக்க ஓடிஞர்கள்.

''பரமா!''

''கெட்ட பயலே!''

''இந்தக் கணமே வீட்டுக்கு வா!''

ஆனுல் பரமன் கேட்கவில்லே.

''கப்பல்கள்! சின்னக் கப்பல்கள்!'' என்று பிள்ளேகளின் குதூகலப் பாட்டைப் பாடினுன்.

''கால்களே நனேத்துக் கொள்வாய்! உனக்கு உடம்புக்கு வந்து விடும்!'' என்று சுருள் கம்பிக் கால்களால் நடைபாதையில் குதித்துக் கூத்தாடிய படி பயங் காட்டினுன் திருகாணி.

பையனே அவன் சுளுவாக நெருங்கி விட்டான், ஆனுல் நீரோடையில் கால் வைக்க அஞ்சினுன்.

அதனால்தான் சிறுவனை அவனால் பிடிக்க முடிய வில்லை.

"இந்தா, உன்னிடம் தான் சொல்லுகிறேன். காதில் படுகிறதா?"

"கப்பல்கள்! சின்னக் கப்பல்கள்!" என்று கீச்சிட்டான் பரமன்.

"அட நில்லேன், பரமா! உனக்கு ஒரு கதை சொல்லட்டுமா? நீ இங்கே வந்தால் தான் சொல்லு வேன். ஆகா. எப்பேர்ப்பட்ட கதை, தெரி யுமா?.. சொல்லுகிறேன், கேள்... 'ஒரே ஒரு ஊரிலே இருந்தது யார் பேச்சையும் கேட்காத சிண்டாணி நீராவி எஞ்சின்...' குட்டங்களிலே ஓடாதே, பரமா!"

பரமனோ, கப்பல்களைத் தவிர எதிலுமே கவ னம் செலுத்தவில்லை.

"நான் உனக்கு அருமையான கப்பல் பண்ணித் தருகிறேன். ரொம்ப ரொம்ப நல்ல கப்பல்! நிசமான கப்பல்!"

இதைக் கேட்டதுமே சிறுவன் நின்று விட் டான். அவனை விரட்டிக் கொண்டு ஓடினதால் மூச்சு முட்டிய போதிலும் திருகாணியால் கடைசி யில் அவனுடைய மேல் சட்டையைப் பிடிக்க முடிந்தது.

''கப்பல்! எனக்குச் சின்னக் கப்பல் வேண்டும்!'' என்ருன் பரமன்.

''கிடைக்கும் உனக்குக் கப்பல்!.. அப்பா, களைத்துப் போனேன்!.. போவோம் வா வீட்டுக்கு! முதலில் உடம்பைத் துவட்டிக் கொள், கதகதப்பான சோடுகள் போட்டுக் கொள், அப்புறம் கப்பல் கட்டுவோம். இந்தா, பென்சில், புதிய சோடுகள் வரைந்து தா. எனக்கு வேண்டிய கருவிகளையும் வரைந்து தா. அதோடு இரண்டு தேவதாருப் பலகைகளும் பல விதமான திருகாணிகளும் எனக்கு வேண்டி இருக்கும். வேறு வழி இல்லை, கப்பல் கட்டித்தான் ஆக வேண்டும்.''

அவர்கள் வீட்டுக்கு ஓடி, பரமனுடைய உடைகளை அவிழ்த்து, பென்சில் வரைந்து தந்த பூந்துவாலையால் அவனுடைய உடம்பைத் துவட்டி, கட்டிலில் படுக்கப் போட்டார்கள்.

மாய ஓவியன் இதற்காகவும் வேலை செய்ய வேண்டி இருந்தது.

மெத்தென்ற கட்டில்கள், போர்வைகள், சௌகரியமான நாற்காலிகள், வட்ட மேசை, புதிதாய்ச் சுட்ட சிவந்த பன் ரொட்டிகள், சூடான பால் நிறைந்த கோப்பைகள், பெரிய கணப்பு (ஒரு வேளை தேவைப்படலாமே), இவற்றை எல்லாம் வரைந்தான் பென்சில்.

சுவர்க் கடிகாரத்தை மட்டுந்தான் பென்சில் வரையவில்லை. எதனுலோ தெரியவில்லை, கடிகாரம் சுவற்றில் ஏற்கெனவே மாட்டி இருந்தது. உருண்டையான ஊசலி தொங்கி ஆடி, ''டிக்-டாக், டிக்-டாக்'' என்று ஒலித்துக் கொண்டிருக்குமே, அந்த வகையான பழங்காலச் சுவர்க் கடிகாரம்...

வீட்டோடு கூடவே இந்தச் சுவர்க் கடிகாரமும் எப்படி வந்து சேர்ந்ததோ, ஒருவருக்கும் தெரியாது. ஆனுல் மாய வித்தைக்காரர்களின் போக்கே அப்படி. ஏதாவது ஓர் அற்புதம் அவர்களை அறியாமலே நடந்து விடும்.

இந்த மாதிரி மாயங்களைக் கண்டு ஆச்சரியப்படுவதைக் கூடத் திருகாணி நிறுத்தி விட்டான். சிறுவன் பரமனுக்குத் தடிமல் பிடித்து விடக் கூடாதே என்றுதான் அவன் கவலைப்பட்டான்.

போர்த்துக் கொள்ளவோ சூடான பால் சாப்பிடவோ மாட்டவே மாட்டேன் என்று அடம் பிடித்தான் பையன். திருகாணி முயற்சி செய்து அவனை வழிக்குக் கொண்டுவர வேண்டி இருந்தது.

''நீ என் பேச்சைக் கேட்காவிட்டால் உனக்குக் கப்பல் கட்டித் தர மாட்டேன்'' என்முன் திருகாணி.

பரமன் உடனே பாலைக் குடித்து விட்டான்.

மாலை நேரம் வந்தது.

''இன்றைக்கு நான் ஒரேயடியாகக் களைத்துப் போனேன்'' என்று பன் ரொட்டி தின்று பாலைக் குடித்ததும் பெருமூச்சு விட்டான் பென்சில். (மாய வித்தைக்காரர்களும் பால் குடிப்பது உண்டு.) ''எனக்கு ஒரேயடியாகத் தூக்கம் வருகிறது'' என்று கொட்டாவி விட்டான். (மாயவித்தைக் காரர்கள் கூடச் சில சமயங்களில் கொட்டாவி விடுவது உண்டு.)

''சந்தேகம் இல்லாமல் பையன் தூங்க நேரம் வந்து விட்டது. இந்த நேரத்தில் எல்லாப் பிள்ளை களும் தூங்குகிறார்கள். பரமா, கொட்டக் கொட்ட விழித்துக் கொண்டிராதே! தூங்கு இப்போதே! நான் உனக்குக் கதை சொல்லுகிறேன்...'' என் றான் திருகாணி.

''உனக்குக் குழந்தையை வளர்க்கத் தெரிய வில்லை. அவனுக்குச் செய்து காட்ட வேண்டும்'' என்றான் பென்சில்.

சின்ன ஓவியன் ஆவென்று கொட்டாவி விட்டுக் கொண்டு மேல் சட்டையையும் சராயையும் கழற்றினான், கட்டிலின் பக்கத்தில் சுவற்றில் ஆணி வரைந்து தன் உடைகளை ஆணியில் மாட்டினான், துப்புரவான வெள்ளைத் துப்பட்டி மேல் படுத்து,

தலையை மூடிப் போர்த்துக் கொண்டு அயர்ந்து உறங்கி விட்டான்.

''தூங்குணி'' என்று வாய்க்குள் முணு முணுத்துக் கொண்டான் திருகாணி. பின்பு பரமனுக்குக் கதை சொல்லத் தொடங்கினான்: ''ஒரே ஓர் ஊரிலே, சொன்னபடிக் கேட்காத சின்னஞ் சிறு நீராவி எஞ்சின் இருந்தது...''

திறந்த சன்னல்களுக்கு வெளியே, செடிகள் பெரிய மரங்கள் போலச் சரசரத்தன. கால்களைத் தொப்புத் தொப்பென்று அடித்தபடி எங்கோ அருகாமையில் ஓட்டம் பிடித்தார்கள் சிறுவர்கள். கடைசியில் சிறுவர்களும் போய் விட்டார்கள். மரச்சாலையில் நிசப்தம் குடி கொண்டது. இரவு வந்து விட்டது. குளிர் நீல மரச் சாலை என்ற பெயர் உள்ள அந்த மரச்சாலையின் அமைதியான மூலையில், அடர்ந்த கிளைகளுக்கு அடியில் மறைந்திருந்த விந்தையான சின்ன வீட்டை யாருமே கவனிக்கவில்லை, அது எவர் பார்வையிலும் படவில்லை.

## அத்தியாயம் ஒன்பது

### இதில் சுண்டெலியும் பூனையும் வருகின்றன

இளநீலம், பச்சை, வெள்ளை, சிவப்பு, கறுப்பு ஆகிய பல நிறங்களில், கோடுகள் போட்ட நீராவி எஞ்சின்கள் திருகாணி மேஸ்திரிக்குக் கனவில் தெரிந்து கொண்டிருந்தன.

அவை மெல்லிய குழாய்கள் வழியே "கூ-கூ-கூ!" என்று சீழ்க்கை அடித்தபடி தண்டவாளங்களில் ஓடின.

திடீரென்று ஓர் எஞ்சின் கிரீச்சிடத் தொடங்கிற்று. அதன் சக்கரங்களுக்கு மசகு போட ஆட்கள் மறந்து விட்டார்கள் போல இருந்தது.

அது முறையிடுவது போல இரைந்து கிரீச்சிடவே, திருகாணி மேஸ்திரி அதை நிறுத்தி, அதன் பன்னிரண்டு சக்கரங்களுக்கும் நன்றாக மசகு போட்டான். ஒரு நீராவி எஞ்சின்கூட, வெள்ளையோ, கறுப்போ, கோடு போட்டதோ, சிவப்போ, எந்த விதமான எஞ்சினும் அக்கம் பக்கத்தில் உண்மையில் இருக்கவில்லை, இந்த எஞ்சின் சொப்பனத்தில்தான் தெரிந்தது என்றாலும், ஒரு நீராவி எஞ்சின்கூட நெறு நெறுத்துக் கிரீச்சிடும்படி விடத் திருகாணி மேஸ்திரியால் முடியுமா

எங்காவது? அதனுல்தான் அவன் பெரிய மசகுக் கலத்தை எடுத்துச் சக்கரங்களுக்கு மசகு போட்டான். ஆனுல் நீராவி எஞ்சின் முன்னை விட அதிகச் சத்தத்துடன் கிரீச்சிடத் தலைப்பட்டது.

''எனக்கு ஒன்றுமே புரியவில்லை!'' என்று கனவில் சொன்ன திருகாணி மேஸ்திரி விழித்துக் கொண்டான்.

அறையில் ஓசையே இல்லை. வெளியே நிலவு காய்ந்து கொண்டிருந்தது. கூரைக்கு மேலே இலைகள் சரசரத்துக் கொண்டிருந்தன. அறையின் ஒரு மூலையில் சுவர்க் கடிகாரம் ''டிக்-டாக், டிக்-டாக்'' என்று மென்மையாக ஒலித்துக் கொண்டிருந்தது. திருகாணி கண்களை மூடிக் கொண்டான். உடனே அறை முழுதிலும் கேட்டது நெறு நெறுப்பு.

சுண்டெலி கறவிய சத்தம் அது.

திருகாணி தூங்க முயற்சி செய்தான், ஆனுல் சுண்டெலி முன்னைவிட உரக்கக் கறவத் தொடங்கிற்று.

கேடு கெட்ட சுண்டெலியைப் பயமுறுத்துவதற்காக அப்போது சுவற்றில் இடித்தான் திருகாணி. ஆனுல் சுண்டெலி மூர்க்கமாகக் கறவிக் கொண்டு போகவே பென்சிலும் பரமனும் விழித்துக் கொண்டார்கள்.

''யார் அது? ஊம்?'' யார்?'' என்று கேட்டான் பென்சில்.

''சுண்டெலியை எதற்காக வரைந்தாய்?'' என்று சிடுசிடுத்தான் திருகாணி மேஸ்திரி.

''நான் வரையவில்லையே சுண்டெலியை! சத்தியமாய்ச் சொல்லுகிறேன், நான் வரையவே இல்லை!'' என்றான் பென்சில்.

''நல்ல கதைதான். இவன் சுண்டெலியை வரையவில்லையாம், ஆனால் சுண்டெலி கறவுகிறதே! ஒருவேளை, நான் வரைந்தேனோ அதை?'' என்று இடும்பு செய்தான் திருகாணி.

சுண்டெலியோ வர வர அதிகச் சத்தத்துடன் கறவிற்று. பென்சிலால் தாங்க முடியவில்லை. அவன் தன் பூட்சை எடுத்து அறையின் இருண்ட மூலையில் எறிந்தான். சுண்டெலி கணப் போது அடங்கிற்று, ஆனால் அப்புறம்...

''க்ர்ரிச்! க்ர்ரிச்! கிரீச்!'' என்று குதூகலமாக ஓசை செய்தான் பரமன்.

''க்ர்ரிச்! க்ர்க்ர்ரிச்! கர்ரீச்!'' என்று பதில் குரல் கொடுத்தது சுண்டெலி.

''பையன் தூங்க மாட்டேன் என்கிறான்!'' என்று ஆத்திரப்பட்டான் திருகாணி.

''இல்லை, என்னால் இதைத் தாங்க முடியாது!'' என்று வீரிட்டான் பென்சில்.

அவன் எழுந்திருந்தான். அப்புறம் அவன் என்ன செய்தான் தெரியுமோ? சட்டென்று ஒரு பூனையை வரைந்தான். மயிர் அடர்ந்த, அழகான சாம்பல் நிறப் பூனை அது.

அறையில் உடனே அமைதி குடிகொண்டது. சுண்டெலி எதனாலோ அப்புறம் கறுமுறுக்கவில்லை. திருகாணி மேஸ்திரி இடது பக்கம் ஒருக் கணித்துப் படுத்துத் தூங்கத் தொடங்கினான். பென்சில் இழுத்துப் போர்த்துக் கொண்டு...

மாயப் பூனை முதலில் ஒவ்வோர் அறையியி லும் புகுந்து நடந்தது. பின்பு சுவர்க் கடிகாரம் ''டிக்-டாக், டிக்-டாக்'' என்று ஒலித்ததை உற்றுக் கேட்டது. அப்புறம் கடிகாரத்தில் ஊசலி இங்கும் அங்குமாக ஆடுவதைக் கண்டது. தன் பச்சை விழிகளால் அதைப் பார்த்து ''மியாவ்'' என்று கத்திற்று. மெல்லிய நீண்ட வால் உள்ள உருண்டையான கறுப்புச் சுண்டெலி அது என்று நினைத்தது.

பதுங்கிப் பதுங்கிக் கிட்டே போய், தாவிப் பாய்ந்தது. ஊசலியும் கடிகாரமும் மாயப் பூனை யும் பயங்கரமான தடதடப்புடனும் மியாவ் என்ற கத்தலுடனும் தரையில் விழுந்தன.

''என்னால் இதைத் தாங்கவே முடியாது!'' என்று கூப்பாடு போட்டான் திருகாணி.

''சூ!'' என்று அதட்டி, மறு பூட்சைப் பூனை மேல் எறிந்தான் பென்சில்.

பரமனே, கைகளைக் கொட்டிக் கலகலவென்று சிரித்தான். அவனுக்கு ஒரே குதூகலம்.

மூன்று பேரும் பூனையைத் துரத்தினார்கள். அவர்கள் இரைந்தார்கள், பூனை மியாவ் என்று கத்திற்று, அறை நெடுக ஓடிற்று. நாற்காலிகள் விழுந்தன, கோப்பைகள் உடைந்தன. கடைசியில் பூனை தானாகவே சன்னல் வழியாக வெளியே பாய்ந்து விட்டது.

''இந்தப் பூனையை நீ எதற்காக வரைந்தாய்?'' என்று கேட்டான் திருகாணி.

''பையன் இன்னமும் தூங்காமல் இருக்கிறான். இது சரியே இல்லை'' என்றான் பென்சில்.

''தூங்க வேண்டும்'' என்று கண்டிப்பாகச் சொன்னான் திருகாணி.

போர்வையால் சிறுவனைப் போர்த்து விட்டு, தானும் தன்னுடைய கட்டிலில் படுத்துக் கொண்டான். வெள்ளையும் கறுப்பும் கோடு போட்டவையுமான நீராவி எஞ்சின்கள் விரைவில் அவன் கனவில் மறுபடி தோன்றத் தொடங்கி விட்டன.

## அத்தியாயம் பத்து

### இதில் பரமன் சந்திரனுக்குப் பறக்கிறுன்

திருகாணி அதிகாலையில் சுருள் கம்பி போலப் படுக்கையில் துள்ளி எழுந்து, தலைக்கு நாள் பரமனைப் படுக்கப்போட்ட கட்டிலைப் பார்த்தான்.

''பரமன் காணுமல் போய் விட்டான்! டேய், பென்சில், எழுந்திரு! பரமனைக் காணேும்!'' என்று கூப்பாடு போட்டான்.

உண்மையாகவே படுக்கை வெற்ருய் இருந்தது.

கதவை விரியத் திறந்து வெளியே பாய்ந்தார்கள் இருவரும், ஆனுல் எங்கே போவது என்று அவர்களுக்குத் தெரியவில்லை. திடீரென்று... பரமன் அவர்கள் கண்களில் பட்டான்.

இந்தப் பரமன் என்ன செய்து கொண்டிருந்தான் தெரியுமோ? உங்களால் ஊகிக்கவே முடியாது. சட்டையையோ கால் சராயையோ கிளையில் மாட்டிக் கொண்டு மரத்தில் தொங்கியபடிப் புன்னகை செய்து கொண்டிருந்தான் அவன்! ஒளிபுகும் பிளாஸ்டிக் காகித உறையால் அவனுடைய முகமும் தலையும் மூடப்பட்டிருந்தன. ரொட்டி உலராமல் இருப்பதற்காகப் போட்டு வைக்கும் சாதாரணப் பிளாஸ்டிக் உறை அது.

அதே மாதிரி உறைகளால் தலைகளையும் முகங்களையும் மூடிக் கொண்டிருந்த பையன்கள் கிளைக்கு அடியில் நின்று கொண்டிருந்தார்கள். ஒரு பையன் கட்டளை இட்டான்.

''பறப்புக்குத் தயார் ஆகுக! எல்லாரும் தயாரா?''

''தயார்!'' என்று ஒரே குரலில் விடை அளித்தார்கள் பையன்கள்.

''தயார்!'' என்று கீச்சிட்டான் பரமன்.

''ராக்கெட்டை முடுக்குக!''

ஒரே திருப்தியுடன், முகமெல்லாம் ஒளி விட, பரமன் ஆடிக் கொண்டிருந்த கிளையைப் பையன்கள் பிடித்து முழு பலத்துடன் தரைப் பக்கம் வளைத்தார்கள்.

அதற்குள் திருகாணியும் பென்சிலும் பதை பதைப்புடன் கைகளை ஆட்டிக் கொண்டு பையன்கள் மேல் பாயவே, ''ராக்கெட்டு நிபுணர்கள்'' கிளையை விட்டு விட்டு நாலா பக்கமும் சிதறி ஓடினார்கள்.

கிளை சட்டென்று நிமிர்ந்தது. பரமன் அதோடு மேலே துள்ளினான்.

''ஹுரே! அவன் கோளப் பாதையை அடைந்து விட்டான்! கோளப் பாதையில் பறக்கிறான் பார்!''

என்று மகிழ்ச்சி பொங்க ஆரவாரித்தார்கள் பையன்கள்.

பரமனைக் கிளையிலிருந்து இறக்குவதற்கு ஏணி வரைய வேண்டி வந்தது. பென்சில் மிகவும் பதற்றம் அடைந்திருந்தான். அதனால் ஏணி கொஞ்சம் கோணலாக வாய்த்து விட்டது. திருகாணி சிறுவனைக் கிளையிலிருந்து எடுத்து, கோபத்துடன் பார்த்து, தலையை ஆட்டினான்.

''இந்தப் பயலோடு ஒரே வம்பாய்ப் போயிற்று! இப்படியே போனால் இன்னும் கொஞ்ச நேரத்தில் என் மரைகள் எல்லாம் கழன்று விடும் போல் இருக்கிறது!'' என்றான்.

''சே, சே, சே!'' என்று பரமனிடம் கண்டிப்பாகச் சொன்னான் பென்சில்.

''எதற்காகத்தான் நீ வரைந்தாய் இவனை, இப்படிச் சொன்னதைக் கேட்காத பிள்ளையை?'' என்று பையனை வீட்டுக்கு இட்டுப் போய்க் கொண்டே குறை சொன்னான் திருகாணி. ''ஏனடா, பரமா, வீட்டிலிருந்து இப்படி ஓடலாமா?'' என்று கேட்டான்.

''சின்னவனிடம் ஒன்றும் கேட்காதே. அவனுக்கு இன்னமும் பேச வராது, ஒன்றும் புரியவும் புரியாது'' என்றான் பென்சில்.

''பேச வரும்!'' என்று எதிர்பாராத போது

குறுக்கிட்டான் பரமன். ''எனக்குப் பேச வரும்... சந்திரன்... ராக்கெட்டு... கோ-ளப்-பா-தை... தலைக் காப்பு... கால்-பந்து... பிரஷ்...''

''ஐயோ, எப்பேர்ப்பட்ட புரியாத சொற்கள்! இவன் அயல்நாட்டானோ என்னவோ!'' என்று ஆச்சரியப்பட்டான் பென்சில்.

ஆனால் திருகாணி எதனாலோ மகிழ்ச்சி அடைந்தான். சுருள் கம்பிகளைக் கிலுக்கக்கூடச் செய்தான்.

''பையன் சரியாய்ப் பேசுகிறான். அவன் படு சுட்டி! நம் பயல் பரமன் நிரம்பக் கெட்டிக்காரன் என்று இப்போது கண்டுகொண்டேன். இவனுக்குச் சீக்கிரம் பேசக் கற்றுக் கொடுக்க வேண்டும். நானே சொல்லித் தருவேன். பரமா, எங்கே, நான் சொல்லுவதைத் திருப்பிச் சொல்லு! அப்-பா! ஊம், சொல்லு.''

''அப்-பா'' என்றான் பரமன்.

''படுகெட்டிக்காரப் பையன்!'' என்று பாராட்டினான் திருகாணி.

''கெட்டிக்காரப் பையன்'' என்று திருப்பிச் சொன்னான் பரமன்.

''இவனை முதலில் குளிப்பாட்டி, வயிறு நிரம்பச் சாப்பாடு போட வேண்டும். பேசச் சொல்லிக் கொடுப்பது அப்புறம்'' என்று அதிருப்தியைக்

காட்டினன் பென்சில். ''இந்தா, பரமா, நான் எப்படிக் குளிக்கிறேன். பார்!'' என்ருன்.

ஓவியன் பூந்துவாலையை எடுத்து வந்தான், கிணற்றில் வாளியை விட்டுத் தண்ணீர் இறைத்தான், பளிச்சிட்ட குளிர்ந்த தண்ணீரில் மகிழ்ச்சியுடன் குளிக்கலானன். (மாய வித்தைக்காரர்கள் கூடக் குளிப்பது உண்டு.)

திருகாணியோ, உடம்பை நெளித்து, ''ப்ர்ர்ர்'' என்று சீறினன். ''குளிப்பது மகாக் கெட்ட பழக்கம்!'' என்ருன்.

இரும்பு மனிதனுக்குத் தண்ணீரைக் கண்டாலே பயம் என்பது உங்களுக்குத் தெரியுமே.

''கெட்ட பழக்கம்'' என்று அவன் மறுபடி சொல்லவே, பென்சிலுக்குக் கோபம் வந்துவிட்டது.

''பையனைக் கெடுக்கிருய் நீ! என்ன சொல்லிக் கொடுக்கிருய் அவனுக்கு?'' என்று கண்டித்தான்.

''அடேயப்பா!.. வாயைத் திறக்கவே கூடாது போல் இருக்கிறதே!'' என்று வாய்க்குள் முணுமுணுத்தான் திருகாணி.

# அத்தியாயம் பதினொன்று

## இதில் ஐஸ்கிரீமும் வெக்கையுள்ள பகலும் உண்மையான வெண்பனியும் வருகின்றன

முதலில் பரமன் குளிக்க மாட்டேன் என்றான், அப்புறம் பால் சாப்பிட மறுத்தான்.

''ஒவ்வொரு நாள் காலையிலும் நீ குளிக்கா விட்டால், நீ பால் சாப்பிட மாட்டேன் என்றால், உனக்குக் கப்பல் கட்டித் தர மாட்டேன்'' என்றான் திருகாணி.

பரமன் உடனே பாலைக் குடித்து, சிவந்த பன் ரொட்டியைத் தின்றான்.

திருகாணி மேஸ்திரிக்கு வேண்டி இருந்த எல்லாக் கருவிகளையும் பென்சில் தயாரித்து வைத்தான். ஆனால் அவன் அவைகளை வரைந்து கொண்டிருந்த நேரத்தில் சும்மா இருக்க முடியாத திருகாணி பரமனுக்குப் பேசச் சொல்லிக் கொடுத்துக் கொண்டிருந்தான்:

''மோட்டார், சொல்லு.''

''மோட்டார்'' என்று திருப்பிச் சொன்னான் சிறுவன்.

''பல்பு.''

''பல்பு.''

''நீ ரொம்பக் கெட்டிக்காரப் பையன்!'' என்று பாராட்டினான் திருகாணி.

''நான் ரொம்பக் கெட்டிக்காரப் பையன்''.

''அப்படியானால் சொல்லு, ஹெலிகாப்டர்.''

''ஹெலி-காப்-டர்.''

''அருமை!'' என்று மகிழ்ந்தான் ஆசிரியன். ''எல்லாவற்றிலும் நல்ல சொற்களை நாம் இன்று கற்போம்!''

ஆனால் சில நிமிடங்கள் கழிந்ததும் பரமனுக்கு அலுத்துவிட்டது. ''மின்விசிறி'' என்பதற்கு பதில் ''மின்சிவிறி'' என்றான். ''மண்வாரி'' என்பதற்குப் பதில் ''மண்ராவி'' என்றான்.

''நீ இவனை வதைக்கிறாய்'' என்று குறுக்கிட்டான் பென்சில். ''இப்படிச் சொல்லித்தரக் கூடாது, எல்லாவற்றையும் ஒரே நாளில்! பையன் எல்லா வார்த்தைகளையும் குழப்புகிறான் பார்!''

திருகாணிக்கு எரிச்சல் வந்தது. ''பார்த்தாயா, என்னைச் சொன்னாயே, நீ மட்டும் என்ன செய்கிறாயாம்? படிப்பிக்க விடாமல் இடைஞ்சல் செய்கிறாய். என் யோசனை என்ன என்றால்...''

''முதலில் இந்த மாதிரிப் பையனை வரைந்து காட்டு, அப்புறம் யோசனை சொல்லலாம்'' என்று அவன் பேச்சில் குறுக்கிட்டான் பென்சில். ''பைய

னுக்குத் தலை வலி எடுத்து விட்டது என்று கூட எனக்குத் தோன்றுகிறது!''

''வலி எடுத்து விட்டது'' என்று குதூகல மாகத் திருப்பிச் சொன்னான் பரமன்.

அப்போது பென்சிலும் திருகாணியும் அவனிடம் பாய்ந்து போய், பையனுடைய தலையைத் தொட்டுப் பார்த்து, ஆகா ஊகூ என்று கவலைப் படத் தொடங்கினார்கள்.

''இவனுக்கு வெக்கையாய் இருக்கிறது, அவ்வளவுதான்'' என்றான் திருகாணி.

''வெக்கையாய் இருக்கிறது'' என்று கூடப் பாடினான் பையன்.

''ஏதாவது செய்ய வேண்டும்!'' என்று பதற்றப்பட்டான் திருகாணி.

''நான் வெண்பனி வரைகிறேன். பையனுக்குக் குளிர்ச்சியாய் இருக்கும்'' என்று முடிவு செய்தான் ஓவியன்.

மெய்யாகவே நிரம்ப வெக்கையாக இருந்தது. மரச்சாலையில் இருந்த பூச்செடிகள் வாடி விட்டன. கோடை வெயிலில் வீதிகளும் கட்டிடங்களும் ஒரேயடியாகச் சூடேறி விட்டதால் நகரில் எல்லா வீட்டுச் சன்னல்களும் நெருப்பாய்க் கொதித்தன. நீர் தெளிக்கும் லாரிகள் நகரத்தில் எங்கும் சுற்றிச் சாலைகளிலும் நடைபாதைகளி

லும் புல்தரைகளிலும் மரங்களிலும், சின்னப் பையன்கள், பெண்கள் மேலும் தண்ணீர் தெளித்தன. வயது வந்தவர்கள் அவைகளைப் பார்த்து எதனுலோ பெருமூச்சு விட்டார்கள்.

திருகாணி மேஸ்திரியும் கொதித்துப் போனுன்—இரும்பு மனிதன் ஆயிற்றே அவன்!

''நீ கணப்பாய்ச் சுடுகிருய்'' என்று பசும்புல் மேல் வெண்பனியை வரைந்தபடியே சொன்னுன் பென்சில்.

''அற்புதம்! அற்புதம்! பாருங்கள், வெண் பனி! அசல் வெண்பனி!'' என்று திடீரெனக் கூவினுர்கள் மரச்சாலைக்கு வந்த பையன்கள்.

''நம்பவே முடியவில்லை! உண்மையான வெண் பனி! ஒரே மாயம்!'' என்ருர்கள் வழிப்போக் கர்கள்.

வெள்ளை வெளேரென்று பளிச்சிட்டது அப் பழுக்கு இல்லாத வெண்பனி, மிகவும் குளிர்ச்சி யானது! பக்கத்தில் மரங்களின் பச்சை இலைகள் சரசரத்தன. பாத்திகளில் வண்ணப் பூக்கள் தணல் போல மலர்ந்திருந்தன. மனிதர்கள் கைக்குட்டை களாலும் செய்தித் தாள்களாலும் விசிறிக் கொண்டு வெக்கை தாங்காமல் உஸ் உஸ்ஸென்று பெருமூச்சு விட்டார்கள்.

வெள்ளைத் தலைக் குட்டையும் வெள்ளை மேல் சட்டையும் அணிந்து, வெள்ளைப் பெட்டியைத் தோள்வாரால் கட்டி எடுத்துக் கொண்டு வந்தாள் ஒருத்தி. வெண்பனியையும் பிறகு பென்சிலையும் பார்த்து வியப்பினால் கூவினாள்.

''எங்கே கிடைத்தது தம்பீ, இந்த இன்பம் உனக்கு? என் ஐஸ்கிரீம் இளகுகிறது. பனிக் கட்டி பெரிய கடையில் தீர்ந்து போய் விட்டது. 'நான் தொலைந்தேன். ஐஸ்கிரீம் வீணாகி விடும்' என்று நினைத்தேன். திடீரென்று 'வெண்பனி, வெண் பனி!' என்ற கூச்சலைக் கேட்டேன்...''

கறுமுறுத்த வெண்பனி மேல் அவள் பெட்டியை வைத்தாள். பின்பு வெள்ளித் தாளில் சுற்றிய ஐஸ்கிரீமை எடுத்துப் பென்சிலுக்கும் திருகாணிக்கும் பரமனுக்கும் ஆளுக்கு ஒன்று கொடுத்தாள்.

''இந்தாருங்கள், அருமைத் தம்பிகளா. தின்பண்டம். எடுத்துக் கொள்ளுங்கள், கூச்சப் படாதீர்கள்...''

அவள் ஐஸ்கிரீம் விற்பவள்.

அந்த நேரத்தில் அவளை யாராவது தடுத்து, குச்சியில் செருகிய ஐஸ்கிரீம் பென்சிலுக்கும் திருகாணிக்கும் என்னென்ன விபத்துக்களை விளைவிக்கும் என்று அவளிடம் சொல்லி இருந்தால், எந்தக்

காரணத்தை முன்னிட்டும் பென்சிலுக்கு ஐஸ் கிரீமை ஒருபோதும் கொடுத்திருக்க மாட்டாள்.

துரதிர்ஷ்டவசமாக ஒருவரும் அவளிடம் ஒன்றும் சொல்லவில்லை. பென்சில் ஐஸ்கிரீமை ஒரு நொடியில் விழுங்கி விட்டுக் குச்சியை நக்கினன்.

## அத்தியாயம் பன்னிரண்டு

இதில் வேனியா காஷ்கின்
ஒரு சன்னலை உடைக்கிருன்

வேனியா காஷ்கினும் மரச்சாலைக்கு வந்தான். அவனேடு வந்த பையன்கள் விளையாட்டுக் கைத் துப்பாக்கிகளைக் கைகளில் பிடித்திருந்தார்கள். அவர்களுடைய இடைகளில் மர உடைவாட்கள் தொங்கின. உடனேயே அசல் வெண்பனிச் சிதல்கள் காற்றில் மினுமினுக்கத் தொடங்கின.

வேனியா காஷ்கின் குழுவைச் சேர்ந்த பையன்கள் வெண்பனி உருன்டைகள் பிடித்து ஒருவர் மேல் ஒருவர் எறிந்து கொண்டதால் சிதறியவை அந்தச் சிதல்கள்.

வழியோடு போன ஒரு கிழவியின் முதுகில் சளப்பென்று அடித்தது ஒரு வெண்பனிப் பந்து. ''அட கொள்ளைக்காரப் பசங்களா! இது

என்ன விளையாட்டு?'' என்று இரைந்தாள் அவள்.

''இவர்கள் கொள்ளைக்காரர்களா என்ன?'' என்று கேட்க வாயெடுத்தான் பென்சில், ஆனால் முள்ளாய்க் குத்திய வெண்பனி உருண்டை அவன் வாயை அடைத்து விட்டது.

''ஒழுங்கீனம்! இந்தச் சண்டையை உடனே நிறுத்த வேண்டும்!'' என்று எரிச்சலுடன் சொன்னார்கள் வழிப்போக்கர்கள்.

பென்சிலின் பின் கழுத்துப்பட்டைக்கு உள்ளேயும் வெண்பனி புகுந்து விட்டது. அவன் கைக் குட்டையால் அதைத் துடைத்துக் கொண்டே, ''போய் விடுவோம் இங்கிருந்து'' என்றான்.

பரமனுக்கோ, போகவே மனம் இல்லை. அவன் வெண்பனியை உண்டை பிடித்து, மற்றப் பையன்களோடு சேர்ந்து கொள்ளத் தயாரானான். திருகாணி சரியான நேரத்தில் அவனுடைய மேல் சட்டையைப் பிடித்துக் கொண்டான்.

''வீட்டுக்குப் போக மாட்டேன்!'' என்று கத்தினான் பரமன்.

அவன் திமிறினான், பொறுமை இல்லாமல் துடித்தான், சண்டை உற்சாகம் பொங்கும் விழிகளால் மற்றப் பையன்களைப் பார்த்தான். ஆனால்

திருகாணி அவனை இறுகப் பிடித்துக் கொண்டிருந் தான்.

''அவர்களிடம் போகாதே! நல்லது எதை யும் அவர்கள் உனக்குக் கற்றுத் தர மாட்டார் கள். கப்பல் கட்டுவதற்கு நேரம் ஆகி விட்டது'' என்ருன் திருகாணி.

''கப்பல்'' என்ற சொல்லைக் கேட்டதுமே பரமன் திமிறுவதை நிறுத்தி விட்டான். வெண் பனிச் சண்டை மும்முரமாக நடந்து கொண்டிருந் ததைக் கூட அவன் சட்டை செய்யவில்லை.

வேனியா காஷ்கின் கையை வீசி ஒரு புது வெண்பனி உருண்டையை எறிந்தான்.

''சளப்! டணர்! தடாம்!..''

வெண்பனி உருண்டை பக்கத்து வீட்டுக் கண் ணுடிச் சன்னலைத் தற்செயலாகத் தாக்கியதால் ஏற்பட்ட ஓசை இது.

''டணர்! கிணிங்-கிணிங்!..''

கண்ணுடிச் சில்லுகள் நடைபாதையில் விழுந்த ஓசை இது.

''எனக்குத் தெரியும் இப்படி நடக்கும் என்று! உதவாக்கரைப் பயலே!'' என்று கோபக் குரல் சன்னலின் உள்ளே இருந்து கேட்டது. ''எனக்குத் தெரியும்! நான் எச்சரித்தேன்! மற்றப் பிள்ளைகள் குழந்தைகளாய் லட்சணமாய் இருக்கிருர்கள்.

இந்தப் பயலோ, சண்டைக் கதைப் புத்தகங்களைக் கணக்கில்லாமல் படித்து விட்டு, கொள்ளைக்காரன் போலக் கைத்துப்பாக்கியை எடுத்துக் கொண்டு சுற்றுகிறான், நாள் பூராவும் சண்டை விளையாட்டே ஆடிக் கொண்டிருக்கிறான். வேறு எந்தக் காரியத்திலும் ஈடுபடுவதில்லை! எதுவும் செய்வதில்லை. படு சோம்பேறி!''

சன்னல் கதவு அறைந்து சாத்தப்பட்டது. அதில் ஒட்டிக் கொண்டிருந்த கண்ணாடிச் சில்லு ''கணீர்!'' என்ற ஒலியுடன் தெறித்து விழுந்தது.

## அத்தியாயம் பதின்மூன்று

### இதில் பரமன் காணாமல் போகிறான்

திருகாணி மேஸ்திரி பரமனை வீட்டுக்கு அழைத்து வந்து, பென்சில் தயாரித்த கருவிகளை எடுத்துக் கப்பல் கட்டத் தொடங்கினான்.

அசல் இழைப்புளியால் பலகைகளைச் சீவி இழைத்தான். அசல் ரம்பத்தால் அவைகளைத் துண்டுகளாக அறுத்தான், வெட்டினான், துளைகள் போட்டான், அடித்தான், வழக்கமான பாட்டைப் பாடினான்:

''எல்லாம் செய்ய வல்லவன் நானே,
பொல்லா மாயத்தை நம்பேனே!
நானே! நானே! நானே!''

''நானே! நானே! நானே!'' என்று கூடப் பாடினான் பரமன்.

திருகாணி மேஸ்திரியோ, முறுக்காணிகளையும் பல்சக்கரங்களையும் வகை வகையான சக்கரங்களையும் இன்றியமையாத சுருள் கம்பிகளையும் மேசை மேல் பரப்பினான். கப்பலுக்கு மோட்டார் இணைத்துத் தயாரித்துக் கொண்டிருந்தான் அவன்.

கப்பல் கட்டப்படுவதைப் பார்த்துக் கொண்டிருந்த பென்சில், ''அற்புதம்!'' என்று தலையை ஆட்டினான்.

திருகாணி கப்பலுக்குள் மோட்டாரைப் பொருத்தினான், மேல் தளத்தை இணைத்தான், பாய்மரத்தை நாட்டினான், திருகாணியை முறுக்கி இறுக்கினான்.

''தயார்!'' என்று முடிவில் சொன்னான்.

கப்பல் மிக மிக நன்றாக வாய்த்து விட்டது. இரண்டு அழகான பாய்மரங்களும் நூலேணிகளும் பின் பகுதியில் சுக்கானும் மேல் தளத்தில் காப்புப் படகுகளும் திறந்த சாளரங்கள் உள்ள அறைகளும் கப்பித்தான் மேடையும் அதில் இருந்தன.

தூண்டில் முள் அளவான நங்கூரம் மெல்லிய சங்கிலியில் பளிச்சிட்டது.

''நீ சரியான மாய வித்தைக்காரன். எவ்வளவு தான் பாடுபட்டாலும் எனக்கு இப்படி வாய்க்கவே வாய்க்காது!'' என்று புகழ்ந்தான் பென்சில்.

''மாய வித்தைக்காரன்! மாய வித்தைக்காரன்!'' என்று திருகாணி மேஸ்திரியைச் சுற்றி வந்து குதித்துக் கொண்டே மறுபடி மறுபடி சொன்னான் சிறுவன். ''எனக்குக் கொடு கப்பலை! நான் கப்பல் விடப் போகிறேன்.''

''மறுபடி குட்டத்தில் இறங்குவாயோ?'' என்று முறைத்தான் மேஸ்திரி. ''ப்ர்ர்ர்! நீர்க் குட்டங்களில் அலையாதே!''

''நான் போகிறேன் இவன் கூட. எனக்குத் தண்ணீரைக் கண்டால் பயம் இல்லை'' என்றான் பென்சில்.

''போங்கள், போங்கள். தண்ணீர் எங்குமே இல்லை. வெகு நேரத்துக்கு முன்பே தரை உலர்ந்து விட்டது'' என்று நினைத்துக் கொண்டான் தந்திரக்காரத் திருகாணி.

''பொல்லா மாயத்தை நம்பேனே!
நானே! நானே! நானே!''

என்று பாடியபடி, கப்பலை எடுத்துக் கொண்டு போய்விட்டார்கள் பென்சிலும் பரமனும்.

''ஐஸ்கிரீம்! ஐஸ்கிரீம்! பத்து கோப்பெக்கு! பதினைந்து கோப்பெக்கு! எங்கள் ஐஸ்கிரீம் கேக் கைவிட ருசியானது!'' என்று கூவி விற்றுக் கொண்டிருந்தார்கள் வெள்ளை ஆடை உடுத்த பெண்கள்.

''ஐஸ்கிரீம்'' என்ற சொல்லைக் கேட்டதும் ஓவியன் திடுக்கிட்டான். அவனுடைய நடை வேகம் குறைந்தது. அவன் வாய்க்குள் இப்படிச் சொல்லிக் கொண்டான்: ''அவள் மாய வித்தைக்காரி! நல்ல நெஞ்சு உள்ள மாய வித்தைக்காரி எனக்கு ஐஸ்கிரீம் கொடுத்தாள். அதைவிட அதிக ருசியானது எதுவும் உலகத்தில் இல்லை...''

பக்கத்தில் வாத்தியங்கள் கணீரென்று இசைக்கத் தொடங்கியதையும் ஒலிபெருக்கி மிகவும் உரக்க இப்படி அறிவித்ததையும் பென்சில் காதில் வாங்கிக் கொள்ளவே இல்லை:

''கவனிக்கவும்! மிருகக் காட்சி சாலையில் உள்ள பெரிய அன்னக் குளத்தில் மாதிரிக் கப்பல்களின் சோதனைகள் இன்னும் சில நிமிடங்களில் தொடங்கும். சோதனைகளில் கலந்து கொள்பவர்கள் எல்லோரும் குளத்துக்கு வரும்படி அழைக்கப்படுகிறார்கள்.''

பரமன் தனக்குப் பின் தங்கி விட்டதைக் கவனிக்காமல், ''ஆகா, எப்பேர்ப்பட்ட மாய வித்தைக்காரி!'' என்று வாய்க்குள் முணுமுணுத்துக் கொண்டு போனான் பென்சில்.

மாதிரிக் கப்பல்களும் கைகளுமாகச் சிறுவர்கள் வீதியில் போய்க் கொண்டிருந்தார்கள். அவர்கள் பரமனைக் கண்டார்கள்.

''இவனிடம் எப்பேர்ப்பட்ட கப்பல், பாருங்கள்! டேய், எங்களோடு வாயேன்!'' என்றார்கள்.

பரமனும் பையன்களும் வீதியின் மறு புறம் ஓடினார்கள். கல்லில் செதுக்கிய இரண்டு சிங்கங்கள் அமைந்த உயரமான இரும்புக் கதவுகள் அங்கே இருந்தன. கதவுகளுக்கு மேலே பெரிய எழுத்துக்கள் வெயிலில் பளிச்சென்று மின்னின:

மிருகக் காட்சிசாலை
உயிருள்ள யானைகள்!
கொடிய முதலைகள்!
பயங்கரமான புலிகள்!
உக்கிரமான சிங்கங்கள்!
நச்சுப் பாம்புகள்!

அன்பார்ந்த தங்கைகளே, தம்பிகளே, வாருங்கள் உள்ளே!
நுழைவுக் கட்டணம் பத்து கோப்பெக்குகள்.

மாதிரிக் கப்பல்கள் வைத்திருக்கும் சிறுவர்கள் இலவசமாக உள்ளே வரலாம்!

பரமன் குதித்துக் கூத்தாடிக் கொண்டு உள்ளே போனான். மிருகக் காட்சிசாலைக்கு உள்ளே போகும் போது எல்லாப் பையன்களும் எதனாலோ குதித்துக் கூத்தாடுகிறார்கள்.

## அத்தியாயம் பதினான்கு

### இதில் பரமனை எங்குமே காணவில்லை

''ஐயோ!'' என்று திடுக்கிட்டான் பென்சில். ''பரமா, எங்கே நீ? மறுபடியுமா காணாமல் போய் விட்டாய்?''

''நீங்கள் பரமனைக் கண்டீர்களா?'' என்று போகிறவர்கள் வருகிறவர்களை நிறுத்திக் கேட்டுக் கொண்டு வீதியில் இங்குமங்கும் ஓடினான். எல்லோரும் கை விரித்து விட்டார்கள். ஒருவரும் பரமனைக் காணவில்லை.

ஓவியன் ஒரேயடியாக மனம் சோர்ந்து போய் வீடு திரும்பினான்.

''பரமன் வரவில்லையா?'' என்று வாயிலிலிருந்தே கேட்டான்.

திருகாணி திடுக்கிட்டான். ''நீ என்ன குழப்பி விட்டாயா? பரமன் எங்கே? உன்னை நம்பிச் சின்னப் பையனை விடவே கூடாதே!'' என்றான்.

இரண்டு பேரும் வீதியில் பாய்ந்து ஓடினார்கள். ஆனால் பரமனை எங்கே தேடுவது என்று அவர்களுக்குத் தெரியவில்லை.

மாதிரிக் கப்பல்களை எடுத்துக் கொண்டு அவர்களுக்கு எதிரே வந்த சிறுவர்கள் சிங்கச் சிலைகள் உள்ள மிருகக் காட்சிசாலை வாயிலுக்குப் போனார்கள்.

''சின்னக் கப்பலோடு போன ஒரு பையனை நீங்கள் பார்த்தீர்களா?''

''இன்றைக்குப் போட்டி நடக்கிறது. மாதிரிக் கப்பல்களோடு எல்லாப் பையன்களும் அதற்குப் போகிறார்கள். சீக்கிரம் தொடங்கப் போகிறது!'' என்று பதில் சொன்னார்கள் சிறுவர்கள்.

''ஒருவேளை அவன் நிசமாகவே போட்டிக்குப் போயிருப்பானோ?'' என்று எண்ணினார்கள் திருகாணியும் பென்சிலும்.

ஆனால் மிருகக் காட்சிசாலைக்குள் போவது லேசாய் இல்லை.

''உங்களிடம் மாதிரிக் கப்பல்கள் இல்லையோ? நுழைவுச் சீட்டுக்களுமா இல்லை? அப்படியானால் நுழைவுச் சீட்டுக்கள் வாங்கிக் கொண்டு வாருங்கள்'' என்றார் வாயிலில் நின்ற சோதனையாளர்.

''சீட்டுக்கள் வாங்க எங்களிடம் பணம் இல்லை'' என்று சொல்ல வந்த திருகாணி பேசாதிருந்தான். ''நுழைவுச் சீட்டுகள் விற்கும் இடம்'' என்ற அடையாளப் பலகை தொங்கிய சன்னலுக்கு உள்ளே பார்வை செலுத்தினான். ஒரு மாது அங்கே உட்கார்ந்து நீல நுழைவுச் சீட்டுக்களைக் கத்தரிக் கோலால் கத்தரித்து ஒழுங்குபடுத்திக் கொண்டிருந்தாள். அவளுக்குப் புழுக்கமாய் இருந்தது.

''அப்பப்பா, என்ன வெக்கை!'' என்று பெரு மூச்சு விட்டாள்.

திருகாணி மேஸ்திரி மண்டையைச் சொறிந்து கொண்டான். யோசனை செய்யும் போது சில வேளைகளில் இந்த மாதிரிச் சொறிந்து கொள்வது மனிதர்களின் வழக்கம்.

''எனக்கு யோசனை தோன்றி விட்டது! இரண்டு ஐஸ்கிரீம்களை வரை, சீக்கிரம்!'' என்று சோர்ந்து போன நண்பனிடம் சொன்னான்.

பென்சில் வழக்கத்தை விட வேகமாக ஐஸ் கிரீம்களை வரைந்தான். ஆனால் இரண்டு ஐஸ் கிரீம்களுக்குப் பதில் எதனாலோ தவறாக மூன்று ஐஸ்கிரீம்களை வரைந்தான். திருகாணி இந்தத் தவறைக் கவனிக்கவில்லை. இரண்டு ஐஸ்கிரீம்களை எடுத்துக் கொண்டு சன்னலை நெருங்கினான். அந்த

நேரத்தில் பென்சில் மூன்ருவது ஐஸ்கிரீமைத் தின்று தீர்த்து விட்டான்.

''உங்களுக்கு வெக்கையாய் இருக்கிறதா, அத்தை? நான் உங்களுக்கு ஐஸ்கிரீம் கொண்டு வந்திருக்கிறேன். இதோ!'' என்ருன் திருகாணி.

''அட சமர்த்தே! எவ்வளவு நல்ல பையன்! இந்தா, இரண்டு சீட்டுக்கள். ஆகா, அருமை!..'' என்று மகிழ்ந்தாள் நுழைவுச் சீட்டுக்கள் விற்பவள்.

அவள் சன்னலைச் சாத்திஞள்.

''இடைவேளை: ஐந்து நிமிடங்கள்''

என்ற குறிப்புப் பலகை சன்னலுக்கு வெளியே தொங்க விடப்பட்டது.

பென்சிலும் திருகாணியும் பரமனைத் தேடுவதற்காக ஓடிஞர்கள். அந்த நேரத்தில் மிருகக் காட்சிசாலையின் வாயிலுக்கு எரிச்சலும் புகைச்சலுமாக வந்தான் வேனியா காஷ்கின்.

நுழைவுச் சீட்டுக்கு அவனிடம் பணம் இல்லை. வேனியா சன்னல் கண்ணுடியை உடைத்தது உங்களுக்கு நினைவு இருக்கும். வழக்கமாக நடப்பது போலவே அவனுக்கும் இதற்குத் தண்டனை

6*

கிடைத்தது. ஐஸ்கிரீம் வாங்கவோ, சினிமா பார்க்கவோ, மிருகக் காட்சிசாலைக்குப் போகவோ காசு கிடையாது என்று வீட்டிலே சொல்லி விட்டார்கள். மிருகக் காட்சிசாலைக்குப் போகவும் கப்பல் போட்டியைப் பார்க்கவும் வேனியாவுக்கு ஒரே ஆசையாய் இருந்தது. ஆனால் சொந்தக் கப்பலும் அவனிடம் இல்லை. சங்கடமான நிலைமை! நுழைவுச் சீட்டும் இல்லை, மாதிரிக் கப்பலும் இல்லை.

வேனியா பையன்களை முறைத்துப் பார்த்தான். தனக்குத் தெரிந்த தீமா என்ற ஒரு சிறுவனை அவர்களுக்கு நடுவே எதிர்பாராமல் கண்டான். தீமாவின் கையில் அவன் கட்டிய மாதிரிக் கப்பல் இருந்தது.

''டேய், தீமா! உன் கப்பலை எனக்குக் கொடு! சட்டென்று! நீ வாண்டுப் பயல், நுழைவுச் சீட்டு இல்லாமலே உள்ளே போகலாம்!'' என்றான்.

''கொடுக்க மாட்டேன்!'' என்று துணிச்சலுடன் சொன்னான் தீமா.

''என்ன?'' என்று முகத்தைச் சுளித்தான் வேனியா. ''ஒரு போடு போட்டேனானால் எப்படி இருக்கும், தெரியுமா?..''

''நான் அப்பா கிட்டே சொல்லுவேன்! அவர்

நுழைவுச் சீட்டு வாங்கிக் கொண்டிருக்கிறார், தெரிகிறதா?''

தீமாவின் தகப்பனார் அவர்களிடம் வந்தார்.

''இந்த முரடனுக்கு என்ன வேண்டுமாம்?''

வேனியா உடனே மிகவும் நல்ல பையன் போல முகத்தை வைத்துக் கொண்டு, அருவருப்பு ஊட்டும் பசப்புக் குரலில் சொன்னான்:

''நான் வேடிக்கை செய்தேன், ஹி-ஹி!.. இவன் நிசமாக்கும் என்று நினைக்கிறான், ஹி-ஹி!.. நான் கேலி செய்தேன்.''

தீமாவின் தகப்பனார் வேனியாவை உற்றுப் பார்த்தார். பின்பு தனக்குள் போலச் சொல்லிக் கொண்டார்.

''இந்தப் பயலுக்கு இரண்டு குரல்கள் உண்டு என்பது எனக்கு முன்னே தெரியாது... எவனாவது சின்னப் பையனுடைய கப்பலை இவன் பிடுங்கிக் கொள்வான். இவன் நம்மோடு இருப்பதே மேல். இவனை விடுங்கள், தயவு செய்து, இந்தாருங்கள் நுழைவுச் சீட்டுக்கள்!'' என்று வாயில் சோதனையாளரிடம் கூறினார்.

## அத்தியாயம் பதினைந்து

**இதில் வருகின்றன யானையும் புலியும் சிங்கக் குட்டியும் பாய்மரக் கப்பல்களும்**

நம் இரு நண்பர்களும் மிருகக் காட்சிசாலையில் ஓடியபடி, ''எங்கே போனான் பரமன்?'' என்று கவலைப்பட்டார்கள். ''சொன்னபடிக் கேட்காத பயல் காட்டு மிருகங்களின் ஏதாவது கூண்டுக்குள் புகுந்திருப்பானோ?'' என்று தவித்தார்கள்.

ஒவ்வொரு வேலியின் பக்கத்திலும் நின்று ஒவ்வொரு கூண்டையும் கவனமாகப் பார்த்தார்கள்.

பசும் புல்வெளியில் நின்று கொண்டிருந்த பிரமாண்டமான யானை சாம்பல் நிறத் தும்பிக் கையை வீசி ஆட்டிற்று. ''நல்வரவு! நான் பெரியவன். பெரியவர்கள் ஒருபோதும் ஒருவருக்கும் தீங்கு செய்ய மாட்டார்கள்'' என்று சொல்ல அது விரும்பியது போல் இருந்தது. பரமன் யானையின் பக்கத்தில் இல்லை.

வரிப் புலியோ திருகாணியையும் பென்சிலையும் திரும்பிக் கூடப் பார்க்கவில்லை. கூண்டில் முன்னும் பின்னுமாக உலாவியபடி அது எண்ண

மிட்டது: ''நான் பூனே போல் இருக்கிறேனும், சொல்லுகிருர்கள். ஆனுல் இது உண்மை இல்லே. உண்மையே இல்லே! நான் சுண்டெலிகளேப் பிடிப் பது கிடையாது!''

பாலேவனத்தில் பிடிபட்ட பெரிய சிங்கம் தலேயைப் பாதங்கள் மேல் ஏக்கத்துடன் சாய்த்துக் கொண்டு ஒரு வெற்றுக் கூண்டில் தனியாகப் படுத்திருந்தது.

''பாவம், எப்படி ஏங்கிப் போயிருக்கிறது! இதைத் தடவிக் கொடுக்க எனக்கு விருப்பம் உண்டாகிறது'' என்ருன் திருகாணி.

தனியாய் இருந்த சிங்கத்தின் மேல் பென் சிலுக்கும் இரக்கம் வந்தது. அவன் வெகு நேரம் யோசனே செய்த பின் சின்னஞ் சிறு சிங்கக் குட்டி ஒன்றை வரைந்தான். அது நிசப் பூனேக் குட்டி மாதிரிச் சிண்டாணியாக வாய்த்தது.

கூண்டுக் கம்பிகளின் ஊடாகக் கூண்டுக்கு உள்ளே போயிற்று சிங்கக் குட்டி. அதைக் கண்டு சிங்கம் நிரம்ப மகிழ்ச்சி அடைந்தது. தனியாய் இருப்பவர்களுக்குக் குழந்தைகளின் வருகை எப் போதுமே மகிழ்ச்சி அளிக்கிறது.

ஒலிபெருக்கி அறிவித்தது: ''கவனிக்கவும். பெரிய அன்னக் குளத்தில் மாதிரிக் கப்பல்களின் பெரிய போட்டி தொடங்குகிறது. கைத்தேர்ச்சி

உள்ள சிறுவர்களே, சிறுமிகளே. வாருங்கள் விரைவாக!''

வேனியா காஷ்கினும் சிறுவன் தீமாவும் தீமா வின் தகப்பனும் மிருகக் காட்சிசாலைப் பாதை யில் காணப்பட்டார்கள்.

''நாம் நேரம் தாழ்த்து விட்டோம்!'' என்றார் தீமாவின் தகப்பனார்.

தீமா பலகைக் கப்பலைக் கையில் வைத்திருந் தான். கப்பல் கட்டும் நிபுணர்கள் வகுத்த எல்லா விதிகளுக்கும் பொருத்தமாகச் செய்யப்பட்டிருந் தது அந்தக் கப்பல். திருகாணியும் கைத்தேர்ச்சி உள்ளவன் ஆகையால் தேவதாருப் பலகையால் அமைந்த அருமையான கப்பல் மேல் கவனம் செலுத்தாமல் இருக்க அவனால் முடியவில்லை. ஆம், தேவதாருப் பலகையால் செய்தது! கப்பலின் உடல் பகுதி சாதாரண தேவதாருப் பலகை. அதில் செருகி இருந்தது ஒரு குச்சி—பாய்மரம். சாய் வான கட்டங்கள் போட்ட வெள்ளைக் காகிதம் பாய்மரத்தில் பாயாக ஒட்டப் பட்டிருந்தது.

கப்பலின் வெளிப் பக்கத்தில் "தீமா" என்ற பெயர் நீலப் பென்சிலால் எழுதப்பட்டிருந்தது.

''தம்பீ, இந்த அருமையான கப்பலைக் கட்டி னது யார்?'' என்று மரியாதையாகக் கேட்டான் திருகாணி மேஸ்திரி.

''வேறு யாரும் கட்டவில்லை, நானேதான் பேனுக் கத்தியால் சீவி இழைத்தேன்.''

''கப்பலுக்குத் 'நீமா' என்ற பெயர் எப்படி வந்தது?''

''நான்தான் நீமா'' என்று பெருமையாகச் சொன்னான் சிறுவன்.

திருகாணி கப்பலைப் புகழ விரும்பினான், ஆனால் அதற்குள் அவர்கள் வட்டமான பெரிய குளத்தை நெருங்கி விட்டார்கள்.

குளக் கரையில் ஆட்கள் கூடி இருந்தார்கள். சிறுவர்கள் எல்லாப் பக்கங்களிலும் இருந்து நடந்தோ ஓடியோ குளக் கரைக்கு வந்தார்கள். நிசமான கடற்படை அடையாளக் கொடிகள் பறந்து கொண்டிருந்தன. கரையோரத்தில் நீரை ஒட்டி அமைந்த மேடை மேல், வெள்ளைச் சீருடை அணிந்த அசல் கடற்படைக் காப்டன் நின்று கொண்டிருந்தார். உண்மையான தொலைநோக்கியால் குளத்து நீரைப் பார்த்துக் கொண்டிருந்தார் அவர். அங்கே நிசக் கப்பல்கள் நின்று கொண்டிருந்தன போலவும், உண்மையான அலைகள் அடித்துக் கொண்டிருந்தன போலவும் அவைகளுக்கு அவர் அஞ்சவில்லை போலவும் இருந்தது அவர் பார்த்த தோரணை.

ஆனால் கூட்டம் சூழ்ந்திருந்ததால் திருகாணி

மேஸ்திரிக்கும் தீமாவுக்கும் கப்பல்களோ அலை களோ கண்ணுக்குத் தெரியவில்லை.

''இந்தப் பையனிடமும் கப்பல் இருக்கிறது, இவனே செய்த கப்பல். இவனை முன்னே போக விடுங்கள், தோழர்களே. கப்பல்களின் சோதனைப் போட்டியில் கலந்து கொள்ள வந்திருக்கிறுன் இவன்!'' என்று தீமாவைக் காட்டினுர் பக்கத் தில் நின்ற ஒரு மனிதர்.

''இவனை முன்னே போக விட வேண்டும். போக விடுங்கள் பையனை, போக விடுங்கள்!'' என்ருர்கள் எல்லோரும்.

கப்பல் வைத்திருந்த தீமாவும் அவன் பின் ஞல் அவனுடைய தகப்பனுரும் திருகாணியும் வேனியா காஷ்கினும் குளக் கரை ஓரத்துக்குப் போனுர்கள்.

நீரின் நீலப் பரப்பின் மேல் நின்றன கணக் கில்லாத மாதிரிக் கப்பல்கள். புகை போக்கிகள் உள்ள நீராவிக் கப்பல்கள், பனிப் பாறைகளை உடைக்கும் கப்பல்கள், நீர் மூழ்கிகள், வகை வகையான பாய்மரக் கப்பல்கள் முதலியவை அவற்றில் இருந்தன. காற்று கப்பல் பாய்களை அசைத்தது, ஆனுல் தையல் நூல்கயிறுகளால் கட்டப்பட்டிருந்த கப்பல்கள் இடத்தை விட்டு நகராமல் நின்றன.

எல்லாப் பையன்களும் பாய்மரக் கப்பல்களை ஒரே ஆர்வத்துடன் பார்த்துக் கொண்டிருந்தார் கள். வீரக் கப்பல் தலைவர்கள் இதோ அவற்றின் மேல் தோன்றி, ''நங்கூரங்களை உயர்த்துக!'' என்று அடித் தொண்டையால் கத்துவார்கள் என்று பையன்கள் கற்பனை செய்தார்கள்.

காற்று கப்பல் பாய்களை உப்பச் செய்யும், கப்பல்கள் எட்டாத் தொலைவில் உள்ள இடங் களுக்குப் போகும். அங்கே வெள்ளைக் கடற் பறவைகள் அலைகளுக்கு மேலே பறக்கும், அலை கள் ஆளற்ற தீவுகளின் கரைகளில் மோதும்...— இப்படி ஓடிற்று சிறுவர்களின் கற்பனை.

நீராவிக் கப்பல்களும் கடல்களில் பயணம் செய்யும், அலைகள் மேல் மிதந்து போகும், வெவ் வேறு நகரங்களுக்கு மனிதர்களை ஏற்றிப் போ கும். ஆனால் நீராவிக் கப்பல்கள் ஆளற்ற தீவு களுக்கு எதனாலோ போவதே கிடையாது. பாய் மரக் கப்பல்களோ, எங்கோ மிக மிகத் தூர இடங்களுக்குப் பயணம் செய்யும். அங்கே ஒவ் வொரு பையனுக்கும் ஆளற்ற தீவு கிடைத்து விடும். எந்த நீராவிக் கப்பலிலும் அங்கே போக முடியாது.

அதனால்தான் உலகத்தில் உள்ள வீரப் பை

யன்கள் எல்லோரும் வெள்ளைக் கப்பற் பாய்களை உளமார விரும்புகிறார்கள்...

''நங்கூரங்களை உயர்த்துக!'' என்று உரக்கக் கட்டளை இட்டார் மேடை மேல் நின்ற காப்டன். நிசமான பெரிய கடற்படைக் காப்டன்.

பெரியவர்களுக்கும் பாய்மரக் கப்பல்கள் பிடிக்கும்.

## அத்தியாயம் பதினாறு

### இதில் எல்லோரும் திருகாணியைப் புகழ்கிறார்கள்

காப்டன் ஆணை இட்டார், கரையில் இருந்த பையன்கள் மாதிரிக் கப்பல்களின் கயிறுகளை அவிழ்த்து விட்டார்கள்.

நீராவிக் கப்பல்கள் சங்குகளை ஊதின, சிறு கப்பல்கள் நடுங்கின, குளத்தின் அமைதியான நீரில் எதிர்க் கரைக்கு மிதந்து சென்றன. அங்கே கைகளில் சிவப்புப் பட்டைகளைக் கட்டிக் கொண்டிருந்த மனிதர்கள் கப்பல்களை வரவேற்றார்கள். எந்தக் கப்பல் மற்றவற்றைக் காட்டிலும் விரைவாக வந்தது என்று தெரிந்து கொள்வதற்காக அவர்கள் கடிகாரங்களைப் பார்த்துக் கொண்டிருந்தார்கள்.

வேனியா காஷ்கின் பெருமூச்சு விட்டான். ''அட நான் மட்டும் எப்போதாவது மாய வித்தைக்காரன் ஆனால் ஒரு பாய்மரக் கப்பலை மந்திரம் போட்டு வரவழைத்து அதில் ஏறிக்கொண்டு சமுத்திரத்தில் பயணம் செய்வேன். 'இடப்புறம் திருப்பு! வலப்புறம் திருப்பு!' என்று கட்டளை இடுவேன்'' என்றான்.

''கடலில் கப்பல் ஓட்டுவது நல்லது, நிரம்ப நல்லது'' என்று புகழ்ந்தார் தீமாவின் தகப்பனார். ''ஆனால் இதற்கு நிறைய வீரமும் நிறையத் துணிச்சலும் நிறைய நல்லதனமும் வேண்டுமே!'' என்றார்.

''நான் வீரம் உள்ளவன்!'' என்றான் வேனியா.

''ஊம்-ஊம், நீ தற்புகழ்ச்சிக்காரன் போல் இருக்கிறது. முதலில் இந்த மாதிரிக் கப்பலை உன் கையால் தயாரிக்க முடியுமா என்று பார்'' என்று சொன்னார் தீமாவின் தகப்பனார்.

''வெட்டிப் பேச்சு!'' என்றான் வேனியா காஷ்கின். ''பொம்மைக் கப்பல்களைக் கடையில் வாங்கலாமே. எனக்கு வேண்டியது நிசக் கப்பல்!''

''ஓகோ, அப்படியா? நீ ஒன்றும் செய்ய விரும்பவில்லையாக்கும். ஒருவேளை, நீ சோம்பேறியோ?'' என்றார் தீமாவின் தகப்பனார்.

''யார் சோம்பேறி?'' என்று கேட்டார்கள் பக்கத்தில் நின்ற ஊர்க்காரர்கள்.

''எங்கே அவன், சோம்பேறி?'' என்று கேட்டு, வேனியா காஷ்கின் மேல் பார்வை செலுத்தத் தொடங்கினுர்கள் ஆட்கள். ''சோம்பேறியை எங்களுக்குக் காட்டுங்கள். எங்கள் ஊரில் சோம்பேறிகள் கிடையாதே. எவ்வளவோ காலமாகச் சோம்பேறிகள் மருந்துக்குக் கூடக் கிடையாது'' என்ருர்கள்.

தீமாவின் தகப்பனுர் எல்லோரையும் சமாதானப்படுத்தினுர். ''என்ன நீங்கள், நண்பர்களே. உங்களுக்குத் தவருகக் காதில் பட்டிருக்கும். இந்தப் பையன் சோம்பேறியே இல்லே. புத்தகங்கள் படிக்கிருன் போலிருக்கிறது. எந்த மாதிரிப் புத்தகங்கள் படிக்கிருய்?'' என்று வேனியாவிடம் கேட்டார்.

''சண்டையைப் பற்றியும் உளவாளிகளேப் பற்றியும் கடல் கொள்ளேக்காரர்களேப் பற்றியும்'' என்று பெருமை அடித்துக் கொண்டான் வேனியா.

''அது கூட நல்லது'' என்று சொன்ன தீமாவின் தகப்பனுர் எதற்காகவோ பெருமூச்சு விட்டார்.

''பாருங்கள், பாருங்கள்! யாருடையவோ கப்பல் மற்றக் கப்பல்களே எல்லாம் முந்தி விட்டது!'' என்ருன் தீமா.

''அது என் கப்பல்!'' என்ருன் திருகாணி. ''அப்படியாளுல் பரமன் இங்கே இருக்கிருன் என்று ஆகிறது.''

''உங்கள் கப்பலா?'' என்று கேட்டார்கள் பக்கத்தில் நின்றவர்கள்.

''என்னது! என்னுடையது!'' என்று கூறிஞன் இரும்பு மனிதன். சுற்றிலும் இருந்தவர்கள் எல்லோரும் அவனை மரியாதையுடன் பார்த்தார்கள்.

''நீங்கள் உண்மையான தேர்ச்சி பெற்றவர்! உங்களோடு கை குலுக்க அனுமதியுங்கள்'' என்ருர் தீமாவின் தகப்பஞர்.

திருகாணி தயாரித்த கப்பல் எதிர்க் கரைக்கு வேகமாகப் போயிற்று. பளபளப்பான பெரிய கப்பல்களையும் நீர்மூழ்கிப் படகுகளையும், பனிப் பாறைகளை உடைக்கும் கப்பல்களையும் அது முந்திற்று. எல்லாவற்றிலும் விரைவாகச் சென்ற கப்பல்களை அது அனேகமாக எட்டிப் பிடித்து விட்டது, ஆளுல் பல வகையான பாய்மரக் கப்பல் களும் படகுகளும் அதன் வழியில் குறுக்கிட்டன. திருகாணியின் கப்பல் திடீரென்று செல் திசையை மாற்றிக் கொண்டது. மாதிரிக் கப்பலுக்குள் சின்னஞ்சிறு மாலுமிகளும் கப்பித்தானும் கப்ப லோட்டியும் உட்கார்ந்திருந்தது போலப் போ யிற்று அது. பாய்மரக் கப்பல்களின் கூட்டத்தை

அது கடந்தது, அலைகள் மேல் அசைந்தாடிற்று, வெகு வேகமாகப் போன ஜெட் மோட்டார்ப் படகுகளை முந்துவதற்காகப் பாய்ந்து சென்றது.

வர வர அவைகளை நெருங்கிற்று சிறு கப்பல்!

இன்னும் கொஞ்ச நேரத்தில் எல்லாக் கப்பல் களும் பிந்தி விட்டன! திருகாணியின் கப்பல் முதலாவதாக இறங்கு துறையை அடைந்தது. அது வேகத்தைக் குறைத்து, தானே நங்கூரம் பாய்ச்சி நின்று விட்டது. கப்பலின் முதல் கம்பத்தின் மேல் சின்னஞ் சிறு கொடி ஏற்றப் பட்டது.

## அத்தியாயம் பதினேழு

### இதில் பரமன் புகழ் பெறுகிறான்

''முதலாவதாக வந்த கப்பல் யாருடையது?'' என்று கேட்டார் உண்மையான கடற்படைக் காப்டன்.

''யாருடையது அந்தக் கப்பல்? யாருடையது? அதைச் செய்தது யார், உங்களுக்குத் தெரி யாதா? என்று கேட்டார்கள் திருகாணியிட மிருந்து தூரத்தில் நின்று கொண்டிருந்தவர்கள்.

ஒலிபெருக்கி அறிவித்தது:

''கவனிக்கவும்! முதல் எண் உள்ள கப்பலேக் கட்டியவர் கப்பித்தான் மேடைக்கு வரும்படிக் கேட்டுக் கொள்ளப்படுகிறுர். வெற்றியாளருக்குக் கவுரவப் பட்டம் அளிக்கப்படும். விலே மிக்க பரிசுகளும் வழங்கப்படும்.''

''சில பேருக்கு எப்படி அதிர்ஷ்டம் அடிக்கிறது பாருங்களேன்!'' என்று முணுமுணுத்தான் வேனியா காஷ்கின்.

''உங்களே வாழ்த்துகிறேன்! உங்களோடு அறிமுகம் செய்து கொண்டதில் எனக்கும் என் மகனுக்கும் நிரம்ப மகிழ்ச்சி'' என்று இன்னெரு தரம் திருகாணியின் கையைப் பிடித்துக் குலுக்கினுர் தீமாவின் தகப்பனுர். ''கப்பித்தான் மேடைக்குப் போங்கள், சீக்கிரமாய். .அங்கே உங்களே அழைக்கிறுர்கள்.''

''கைதேர்ந்த தொழிலாளருக்கு வழி விடுங்கள். தேர்ச்சியாளர் போக இடம் கொடுங்கள்!'' என்று சொன்னுர் பக்கத்தில் நின்ற ஒருவர்.

திருகாணிக்கு ஒருபோதும் இல்லாத அளவு மகிழ்ச்சி பொங்கியது. சிறு இரும்பு மனிதன் பளிச்சிட்டான், சந்தோஷத்தால் ஒளி வீசினுன். எல்லோரும் விலகி அவனுக்கு வழி விட்டார்கள்.

திடீரென்று ஒரு கீச்சுக் குரல் ஒலித்தது:

''அது என்னுடைய கப்பல்! என்னுடையது!''

கப்பித்தான் மேடைமேல் தடதடவென்று ஏறினுன் பரமன்.

''பரமன் கிடைத்து விட்டான்!'' என்று கிணு கிணுத்தான் மகிழ்ச்சியில் திளைத்த திருகாணி.

''என்னுடைய கப்பல்! எனக்குத் தாருங்கள் பரிசுகளை!'' என்று மேடையில் ஏறிய பரமன் சொன்னுன்.

பரிசுகள் பக்கத்தில் கிடந்தன. விளையாட்டுச் சாமான்களும், மிட்டாய்களும், பிஸ்கோத்துக் களும், சாக்லேட்டும் பகட்டான பெரிய பெட்டி யில் வைக்கப்பட்டிருந்தன.

''உன் பெயர் என்ன? குலப் பெயர் என்ன?'' என்று கேட்டார் கடற்படைக் காப்டன்.

''பரமன் பென்சிலான்!''

''நீ பள்ளி மாணவனு, இன்னும் பள்ளிப் பருவத்தை எட்டாதவனு?'' ''நான் ரொம்பக் கெட்டிக்காரப் பையன்!'' என்ருன் பரமன்.

''கப்பலை நீயே தயாரித்தாயா? கப்பலை யார் தாமே கட்டினுரோ அவர்தாம் வெற்றியாளராக ஏற்கப்படுவார். புரிந்ததா? தாமே!''

சிறுவன் கவர்ச்சியுள்ள அசாதாரணமான பரிசுகள் மேலும் பின்பு காப்டன் மேலும் கண் ணேட்டி விட்டுச் சொன்னுன்:

''நானே. கப்பலை நானே தயாரித்தேன்.''

''இந்தக் கப்பலுக்காக உனக்குக் கவுரவப் பட்டம் அளிக்கப்படுகிறது. நீ இளம் தொழில் வினைஞன்! உன்னை வரவேற்று வாழ்த்துகிறேன்!''

அவர் சிறுவனுடன் கை குலுக்கி விட்டு, அவனுக்குச் சலாம் செய்தார்.

வாத்தியங்கள் உற்சவ அணி நடை மெட்டை இசைத்தன. எல்லாச் சிறுவர்களும் வெற்றி முழக்கம் செய்து கைகளைத் தட்டினார்கள். தீமாவின் தகப்பனார் திருகாணியை உறுத்துப் பார்த்து, கடிந்து கொள்ளும் பாவனையில் தலையை ஆட்டினார்.

''நீர் வெட்கப்பட வேண்டும், இளைஞரே. பிறத்தியானுக்குச் சேர வேண்டிய புகழுக்கு உரிமை கொண்டாடப் பார்த்தீரே!'' என்று இகழ்ச்சியுடன் சொன்னார் பக்கத்தில் நின்ற ஒருவர்.

''மோசம்!'' என்றார்கள் சுற்றி இருந்தவர்கள் எல்லோரும்.

திருகாணி மேஸ்திரி தன் சுருள் கம்பிகளை வருத்தத்துடன் கிலுக்கினான்.

''போக்கிரி! இவனுக்குக் கன்னத்தில் விட வேண்டும் அறை!'' என்று சீறினான் வேனியா காஷ்கின்.

புகைப்படக்காரர்களும் சமூகப் பிரதிநிதிகளும் பத்திரிகையாளர்களும் கப்பித்தான் மேடையைச் சூழ்ந்தார்கள். வெற்றியாளனோடு பேச எல்லோரும் விரும்பினார்கள். நகரத்தின் மிக நல்ல திரைப் படக் காட்சிசாலைகளுக்கான காலை நேர நுழைவுச் சீட்டுகள் அவனுக்கு இலவசமாகக் கொடுக்கப் பட்டன. இளம் தொழில் வினைஞர் மாளிகை வெற்றியாளனை இரண்டு வாரங்களுக்கு விருந்தாளியாக அழைப்பதன் பொருட்டுத் தன் முழு அதிகாரம் பெற்ற சிறப்புப் பிரதிநிதியை அனுப்பிற்று.

கப்பித்தான் மேடைக்கு மேலே பெரிய ஹெலிகாப்டர் காற்றில் அசையாமல் மிதந்தது. அதன் வெளிப் புறத்தில் வண்ண எழுத்துக்களில் இப்படி எழுதி இருந்தது:

வெற்றியாளருக்கு நல்வரவு!

''நகரத்துக்கு மேலே கவுரவப் பறப்பு நடத்துவதற்குப் பரமன் பென்சிலானை அழைக்கிறோம்!'' என்று ஹெலிகாப்டர் ஒலிபெருக்கி அறிவித்தது.

விமானிகள் நூலேணியைத் தொங்க விட்டார்கள். அதிர்ஷ்டசாலிப் பையன், இளம் தொழில்

வினைஞன் பரமனைக் கடற்படைக் காப்டன் தூக்கி, விமானியிடம் கொடுத்தார்.

''பரமா! பரமா! நாங்கள் உன்னைத் தேடினோம்!'' என்று ஏக்கத்தோடு சொன்னான் திருகாணி.

சிறுவனோ, இரும்பு மனிதனைக் கண்ணெடுத்தும் பார்க்கவில்லை. வெயில் ஒளி வீசிய உயரமான வானத்துக்குப் பரமனைக் கொண்டு போயிற்று ஹெலிகாப்டர்.

''அட பென்சில், பென்சில், இந்தப் பயலை நீ எதற்காகத்தான் வரைந்தாயோ!'' என்று பெருமூச்சு விட்ட திருகாணி சட்டென்று நினைவு படுத்திக் கொண்டான்—நம்மைப் போலவே: ''பென்சில் எங்கே?''

பென்சில் எங்கே?! நாம் அவனை அடியோடு மறந்து விட்டோமே!

''இதோ பென்சில்!'' என்று நீல வண்ணப் பென்சிலைப் பையிலிருந்து எடுத்து நீட்டினான் நல்ல பையன் தீமா.

''இந்தப் பென்சில் அல்ல! காணாமல் போய் விட்டான் பென்சில்!..''

கலவரம் அடைந்த திருகாணி கூட்டத்திலிருந்து வெளியே பாய்ந்து இடது பக்கம் ஓடினவன், பிறகு வலது பக்கம் ஓடினான்.

''பென்சில்! பென்சில்! அடே... பென்சில்!'' என்று கூவி அழைத்தான்.

யாரோ ஏக்கத்தோடு இருமுவது போலத் திருகாணிக்குக் கேட்டது.

தோட்டத்தில் இருந்த அகலமான பெஞ்சியில் உட்கார்ந்திருந்த பென்சிலேக் கண்டான்.

''க்ரிக்-கக்-கக்'' என்று மன்னிப்பு கேட்கும் பாவனையில் இருமினுன் பென்சில்.

''நான் இங்கே இருக்கிறேன்'' என்பது அவன் சொல்ல நினைத்தது.

ஐஸ்கிரீம் தின்ற பின் மிஞ்சிய குச்சிகளின் குவியல் அவனுக்கு முன்ஞல் கிடந்தது.

அதைக் கண்ட திருகாணிக்கு ஆத்திரம் தாங்க முடியவில்லை. ''பாழாய்ப் போன பென்சில்! உன்னைக் குளிர் தாக்கி விட்டது! ஐஸ்கிரீமைக் கணக்கு வழக்கு இல்லாமல் தின்றிருக்கிருய்! மட மட்டிப் பென்சில்! இத்தனை ஐஸ்கிரீம் உனக்குக் கொடுத்தது யார்?''

''க்கார்... க்கக்கர்ர்'' என்று கமறினுன் பென்சில்.

''நான் வரைந்தேன். தற்செயலாக. இனிமேல் அப்படிச் செய்ய மாட்டேன்'' என்பது அந்தக் கமறலின் அர்த்தம்.

''இவர் சூடான பால் சாப்பிட வேண்டும். தடிமல் பிடிக்கும் போது இது நிரம்பப் பயன் உள்ளது'' என்ருர் வழியோடு போன ஒரு கிழவர்.

''வீட்டுக்குப் போவோம் வா, அடங்காப் பிடாரி, கேடு கெட்டவனே, அசிங்கப் பிண்டமே, பென்சில் கட்டையே!'' என்று அடக்க முடியாத கோபத்துடன் காலைத் தொப்பென்று அடித்துக் கத்திஞன் திருகாணி.

பென்சில் பெருமூச்சு விட்டு அவன் பின்ஞல் நடந்தான்.

குரங்குகள் அவனைக் கேலி செய்து சிரித்தன. யானை தலையை ஆட்டி, ''அடாடாடா!'' என்றது.

சிங்கம் எதையும் கவனிக்காமல் சிங்கக் குட்டியுடன் ''பூனையும் சுண்டெலியும்'' விளையாட்டு ஆடிக் கொண்டிருந்தது.

இந்தச் சிங்கக் குட்டியைப் பற்றி மறுநாள் செய்தித்தாள்களில் பின்வரும் தகவல் வெளியாகி இருந்தது:

''மிருகக் காட்சிசாலையில் நிகழ்ச்சி

''சிங்கத்தின் கூண்டில் சின்னஞ்சிறு சிங்கக் குட்டி நேற்று தோன்றியது. குட்டி பால் குடிக்

கிறது, அதன் எடை ஒரு கிலோ. விஞ்ஞானிகள் சிங்கக் குட்டியைப் பார்வையிட்டுக் கொண்டிருக் கிருர்கள்.''

## அத்தியாயம் பதினெட்டு

### இதில் இரும்பு மனிதனுக்கு அழுகை வருகிறது

திருகாணி பென்சிலே வீட்டுக்குக் கூட்டி வந்து கட்டிலில் படுக்கப் போட்டான்.

தொலேபேசியில் ''விரைவு மருத்துவ உதவியை'' அழைப்பது அவசியமாய் இருந்தது, ஆனுல் வீட்டில், தொலேபேசி இல்லே.

பாவம், பென்சிலுக்கு உடம்பு ஒரேயடியாக மோசம் ஆகி விட்டது. அந்த மாய வித்தைக் காரன் நோய்வாய்ப்பட்டு விட்டான். அவனுக்குக் கடுமையான காய்ச்சல் அடித்தது. அவனே, வீட்டில் கடும் குளிர் அடிப்பதாக எண்ணிக் கொண்டான். அவனுடைய உடம்பு வெடவெடவென்று நடுங்கிற்று, பற்கள் கடகடவென்று அடித்துக் கொண்டன.

திருகாணி சன்னல் திரைகளேப் போட்டான். இருந்த எல்லாப் போர்வைகளேயும் தலேயணே களேயும் கூட அவனுக்குப் போர்த்திஞன். அப்படி யும் பயனில்லே!

மாலை ஆயிற்று, இரவும் வந்தது. வீட்டில் கும்மிருட்டு, ஒரே நிசப்தம். பென்சிலின் பற்கள் அடித்துக் கொள்வது கேட்டது.

அடுப்பில் போட்டு எரிப்பதற்குச் சருகுகள் சேகரித்துக் கொண்டு வரலாம் என்று திருகாணி தீர்மானித்தான். வெளியே போய் உதிர்ந்து கிடந்த சருகுகளைப் பொறுக்கிச் சேர்ப்பதில் முனைந்தான்.

மரச்சாலையில் ஒருவரும் இல்லை. எல்லோரும் வெகு நேரத்துக்கு முன்பே உறங்கப் போய் விட்டார்கள்.

''அசட்டுப் பென்சில்! மின் அடுப்பை வரைய மாட்டானே? படு அசடு இந்தப் பென்சில்!'' என்று பாதைகளில் ஓடியபடி முணுமுணுத்தான் திருகாணி.

அவன் முணுமுணுத்தது வெறுமே தான். அவனுக்கு ஒரே ஏக்கமாய் இருந்தது, அழுகை வரும் போல் இருந்தது. அழுகையை அடக்கிக் கொள்வதற்காகவே கோபப்பட்டவன் போல நடித்தான்.

பென்சிலோ, இருட்டு அறையில் படுத்தபடிப் புலம்பினான். காய்ச்சல்காரர்கள் புலம்பும் போது எல்லாவற்றையும் தப்பும் தவறுமாகச் சொல்வார்கள்.

''ஈரிரண்டு ஏழு, மும்மூன்று ஐந்து, ஏழேழு ஒன்பது...'' என்று உளறிக் கொட்டினன் பென்சில்.

அவன் உணர்வு இழந்தான். காய்ச்சல்காரர்களுக்கு நினைவு தப்பிவிடும் போது அவர்கள் எழுந்து எதையாவது தாறுமாருகச் செய்வார்கள்.

பென்சில் போர்வைகளையும் தலையணைகளையும் விலக்கி விட்டுக் கட்டிலிலிருந்து இறங்கி, தட்டுத் தடுமாறியபடிச் சுவற்றை நெருங்கி, என்ன வரைகிறோம் என்று புரிந்து கொள்ளாமல் படங்கள் வரையத் தலைப்பட்டான்.

''ஏழேழு ஐந்து...'' என்று படங்கள் வரைந்து கொண்டே முணுமுணுத்தான்.

ஐயோ, திருகாணி, எங்கே போய் விட்டாய் நீ? சீக்கிரம் வீட்டுக்கு வா. காய்ச்சல்காரப் பென்சிலை வரைய விடாதே.

திருகாணியோ, சருகுகளைச் சேகரித்துப் பெரிய கட்டாகக் கட்டிச் சிரமத்துடன் வீட்டுக்குக் கொண்டு சேர்த்தான். அவ்வளவு பெரிய கட்டைத் தூக்கிக் கொண்டு ஓட முடியாதே.

பென்சில் சுவற்றின் மேல் கடல் கொள்ளைக்காரனுடைய படத்தை வரைந்தான். கொள்ளைக்காரனின் இடைவாரில் செருகி இருந்தன வளைவான

பெரிய கட்டாரியும் இரண்டு கைத்துப்பாக்கிகளும். கொள்ளைக்காரர்களின் கறுப்புக் கொடியை அவன் பிடித்துக் கொண்டிருந்தான். சண்டைக்காரச் சிறுவன் வேனியா காஷ்கின் வரைந்த படத்தில் இந்தக் கடல் கொள்ளைக்காரனைப் பென்சில் ஒரு தரம் கண்டிருந்தான்.

மாயக் கடல் கொள்ளைக்காரன் சுவற்றிலிருந்து பென்சிலைப் பார்த்துக் கண் அடித்தான், கொள்ளைக் காரன் கறுப்புக் கொடியை மடித்துச் சராய்ப் பையில் வைத்துக் கொண்டான்.

ஆனல் காய்ச்சல்கார ஓவியன் எதையும் கவனிக்கவில்லை. அவன் உளவாளியின் படத்தை வரைந்தான். உளவாளியுடைய மழைக்கோட்டுக் கழுத்துப்பட்டை தூக்கி விடப்பட்டிருந்தது. கண்களை மறைத்திருந்தது கறுப்பு முகமூடி.

அப்புறம் நாய் போலக் காணப்பட்ட மைக் கறையை வரைந்தான் பென்சில். எல்லாம் வேனியா காஷ்கின் வரைந்த படம் போலவே!

சருகுகள் சலசலக்க வீட்டில் புகுந்தான் திருகாணி. இலைக்கட்டைத் தரையில் போட்டு விட்டுப் பென்சிலைக் கட்டிலில் படுக்க வைத் தான்.

காய்ச்சல்காரன் கைகளை ஆட்டிக் கத் தினன்:

''ஈரிரண்டு ஐந்து! வேனியா காஷ்கினுக்கு ஐஸ்கிரீம் கொடுங்கள்! ஐஸ்கிரீம் கொடுங்கள்!..''

பாவம், அப்பாவி, பென்சில்!..

இரண்டு கரு நிழல்கள் சுவற்றிலிருந்து விலகி வந்ததையும் பாதி திறந்த வாசல் வழியாக ஓசை செய்யாமல் நழுவி, இரவின் இருண்ட மரச்சாலைக்குப் போனதையும் திருகாணி கவனிக்கவே இல்லை. அவற்றுக்குப் பின்னால் ஓடிற்று மூன்றாவது சின்ன நிழல். இது பார்ப்பதற்கு நாய் போல இருந்தது.

மரச்சாலையில் மரங்கள் தணிவாகச் சலசலத்தன. திருகாணி கதவைச் சாத்தி விட்டு அடுப்பை மூட்டினான். வெப்பமுள்ள நெருப்பு அறையில் வெளிச்சத்தைப் பரப்பிற்று. அடுப்பில் சருகுகள் சடசடத்தன, தழல்கள் அசைந்தாடின, சுவர்களில் வெளிச்சம் அசைந்தாடிற்று.

பென்சில் தூங்கி விட்டான்.

திருகாணியோ, அடுப்பின் பக்கத்தில் உட்கார்ந்து துயரம் பொங்கப் பெருமூச்சு விட்டான்:

''பாவம், பென்சில்!..''

## அத்தியாயம் பத்தொன்பது

### இதில் இராக் கொள்ளைக்காரர்கள் வருகிறார்கள்

அன்று இரவு நகரத்தில் தெரு விளக்குகள் ஏதனாலோ எரியவில்லை. ஒரே இருட்டாக இருந்தது. இந்த மாதிரி இருண்ட இரவுகளில் ஏதாவது நடக்காமல் இருக்காது.

ஊர்க்காரர்கள் வெகு நேரத்துக்கு முன்பே உறங்கப் போய் விட்டார்கள். ஒரு சன்னலுக்கு உள்ளே கூட விளக்கு எரியவில்லை. தூங்கும் போது மனிதர்களுக்கு விளக்கு எதற்கு?

ஒருவருக்கும் தெரியாத இரண்டு சின்ன மனிதர்களும் ஒருவருக்கும் தெரியாத நாயும் அந்த இருண்ட இரவில் வீதியில் ஓடிக் கொண்டிருந்தார்கள். அவர்கள் ஓயாமல் அக்கம் பக்கம் திரும்பிப் பார்த்துக் கொண்டு எல்லாவற்றிலும் இருள் அடைந்த தெருக்கள் வழியே போய், சின்னச் சந்துகளில் புகுந்தார்கள்.

''டாண்! டாண்! டணார்!'' என்று மணி அடித்தது நகரக் கோபுரத்தில் இருந்த கடிகாரம்.

''வள்! வள்!'' என்றது ஒருவருக்கும் தெரியாத நாய்.

பெரிய வளைந்த கட்டாரியையும் இரண்டு கைத்துப்பாக்கிகளையும் இடைவாரில் செருகிக்

கொண்டிருந்த, ஒருவருக்கும் பழக்கம் இல்லாத பெரிய செம்பழுப்புத் தாடிக்காரன் ''உஸ்ஸ்!'' என்று நாயை அடக்கினுன்.

சாம்பல் நிற மழைக்கோட்டு போட்டிருந்த மற்றவன், ''ந-ந-ந-நாம் எங்-ங்-ங்கே ஓ-ஓடு கிறேம்?'' என்று கேட்டான். அவனுக்கு மூச்சு திணறிற்று, மேற்கொண்டு ஓட அவனுல் முடிய வில்லை.

''ஆட்கள் நம்மை விரட்டிக் கொண்டு வரு கிருர்கள் போல் இருக்கிறது!'' என்று திகிலூட் டும் கீழ்க் குரலில் கிசுகிசுத்தான் தாடிக்காரன்.

''நம்மை யாரும் விரட்டவில்லை என்று நினைக் கிறேன்.''

மழைக்கோட்டு மாட்டியவன் நின்று விட்டான். தாடிக்காரனும் நின்ருன். உற்றுக் கேட்டபடி இரண்டு பேரும் சுற்று முற்றும் கண்ணேட்டினுர் கள். எங்கும் எவரையும் காணவில்லை.

''வேடிக்கைதான்! மெய்யாகவே யாரும் விரட்டிக் கொண்டு வரவில்லை! நாம் கொள்ளைக் காரர்கள், நம்மை யாரும் பின்தொடரவில்லையே! புத்தகங்களில் இப்படி நடக்காதே!'' என்ருன் தாடிக்காரன்.

மழைக்கோட்டுக்காரன் ரோசத்துடன், ''நான் கொள்ளைக்காரன் அல்ல. நான் நேர்மையுள்ள

உளவாளி! என் குலப் பெயர் துளையன்!'' என்ருன்.

''வீ!'' என்று சீழ்க்கை அடித்தான் தாடிக் காரன். ''கொள்ளைக்காரனும் உளவாளியும் ஒரே

''பையனுக்கு உடம்புக்கு வந்து விட்டதாம்!''

''விரைவு மருத்துவ உதவியை உடனே அழைக்க வேண்டும்!''

''அடாடா, எவ்வளவு கெடுதல்! பையனுக்கு உடம்புக்கு வந்து விட்டதாமே!''

இப்படிக் கலவரப்பட்டார்கள் செய்தியைக் கேட்டவர்கள்.

டிராலிபஸ்களும் கார்களும் பேருந்துகளும் நின்று விட்டன. வெளிறிய பயணிகள் சன்னல் கள் வழியாக எட்டிப் பார்த்தார்கள்.

''எவ்வளவு வருந்தத் தக்க சேதி! எப்பேர்ப் பட்ட துரதிர்ஷ்டம்! பையனுக்கு உடம்புக்கு வந்து விட்டதாமே!''

கொள்ளைக்காரர்களுக்கு யோசனை செய்யவே நேரம் கிடைக்கவில்லை. எச்சரிக்கைச் சங்கு ஊதிய

இரண்டு ஆட்கள் கடல் கொள்ளைக்காரனைத் தூக்கு படுக்கையில் கிடத்திக் காரில் ஏற்றினார்கள்.

கப்பித்தான் களகளன் கால்களை உதைத்துக் கொண்டு கத்தினான்:

''எனக்கு உடம்பு சரியாய் இருக்கிறது! மருத்துவ மனைக்குப் போக எனக்கு விருப்பம் இல்லை! நான் கொள்ள்-ளைக்காரன்! நான் கப்பித்தான்! துளையா, உதவிக்கு வா! காப்பாற்று!''

ஆட்கள் பெருமூச்செறிந்தார்கள்.

''பாவம், அப்பாவிப் பையன். இவனுக்கு உடம்பு படு மோசம் ஆகி விட்டது! சன்னியில் எப்படிப் பிதற்றுகிறான், கேட்டீர்களா?''

கதவுகள் சாத்தப்பட்டன. எச்சரிக்கைச் சங்கு ஊதிற்று, கடல் கொள்ளைக்காரன் மருத்துவ மனைக்குக் கொண்டு போகப்பட்டான்.

துளையன் சேதி என்ன? அவனுக்கு வருத்தமாய் இருந்தது என்று நினைக்கிறீர்களோ? நேர்மாறாக, மகிழ்ச்சி தான் உண்டாயிற்று. சந்தோஷத்தால் இஹிஹி என்று இளித்தான்.

''நன்றாக வேண்டும் உனக்கு, தாடிக்காரத் தடியா! மருத்துவ மனைக் கட்டிலில் படுத்திரு, விளக்கெண்ணெய் சாப்பிடு! நீ இல்லாமலே நான் சமாளித்துக் கொள்வேன்'' என்று ஆனந்தப் பட்டான்.

''ஹி-ஹி-ஹி! எல்லாம் எனக்கே கிடைத்து விடும்! கப்பலும் சரி, பென்சிலும் சரி! எல்லாம் என்னுடையவை! ஹெ-ஹெ-ஹே...''

சிவப்புத் தொப்பியும் தானுமாக இளித்துக் கொண்டிருந்த இந்த வேடிக்கையான பெண்ணை உடன் அழைத்துக் கொண்டு மெட்ரோவில் புகுந் தார்கள் சிறுவர்கள்.

## அத்தியாயம் முப்பத்து நான்கு

### இதில் மறுபடி வருகின்றன சாலைப் போக்குவரத்தைத் தடுக்கும் புருக்கள்

சடைநாய் மைக்கறை குலைத்துக் கொண்டே வெள்ளைக் காரின் பின்னே ஓடிற்று. கார் மின் வேகத்தில், ராக்கெட்டு போல வீதிகளில் பாய்ந் தது. காரோட்டி சுருக்கு வழியில் போக விரும் பினர். நோயாளிப் பையன் கைகளை ஆட்டிக் கொண்டு கொள்ளைக்காரக் குரலில் தொடர்ந்து கூப்பாடு போட்டான்:

''மருத்துவ மனை எனக்கு வேண்டாம்! நான் கொள்-ள்ள-ளைக்காரன்!''

தாடியைச் சுற்றிக் கட்டி இருந்த கழுத்துக் குட்டை அவிழ்ந்து விடவே, செம்பழுப்புத் தாடி வெளியே தெரிந்தது. மருத்துவருக்கு ஆச்சரியம் தாங்கவில்லை.

''தாடி! பையனுக்குத் தாடி வளர்ந்து விட்டது! ஏதோ புது மாதிரி நோய்! வேகமாய் விடு மருத்துவ மனேக்கு! ''என்று முகம் வெளிற அவசரப்படுத்தினர்.

ஆனல் அந்தச் சமயம் பார்த்துக் கார் நின்று விட்டது.

''சீக்கிரம்! சீக்கிரம்!'' என்று முடுக்கினர் மருத்துவர்.

''என்னல் முடியாது! புருக்கள்! வழியில் புருக்கள்! தடுக்கின்றன!'' என்ருர் வெளிறிப் போன காரோட்டி.

''வாஸ்யா! ஆட்டுகழியை நீ ஏன் எடுத்து வரவில்லே?''

''மன்னிக்க வேண்டும். மறந்து போனேன்...''

''வாஸ்யா, என்னதான் வருத்தமாய் இருந்தாலும் உன்னே நான் தண்டித்தாக வேண்டும். உனக்குக் கண்டனச் சீட்டு கிடைக்கும்!''

கைகளே ஆட்டிப் புருக்களே விரட்டுவதற்காக மருத்துவர் காரிலிருந்து இறங்கினர்.

''ஓஷ்! ஓஷ்! ஓஷ்!''

திறந்த கதவு வழியாக ராக்கெட்டை விட வேகமாகப் பாய்ந்தான் கடல் கொள்ளேக்காரன். தாடிக்காரச் சிறுவன் எந்தச் சந்தில் புகுந்தான் என்று பார்க்கக் கூட மருத்துவருக்கு நேரம்

கிடைக்கவில்லை. முக்கி முனகிய மருத்துவரையும் காரோட்டி வாஸ்யாவையும் வெள்ளைக்காரையும் சட்டை செய்யாமல் காரைச் சுற்றி நிதானமாக வளைய வந்தன புறுக்கள்.

## அத்தியாயம் முப்பத்து ஐந்து

### இதில் படம் வரையக் கூடாது

ஆனால் நம்முடைய சின்ன நண்பர்கள்—பென்சிலும் திருகாணியும்—என்ன ஆனார்கள்?

மாலுமி போல் காணப்பட்ட மீசைக்காரர், மாதிரிக் கப்பல்களைச் சிறுவர்களுக்கு எடுத்துக் கொடுத்துக் கொண்டிருந்த அதே மீசைக்காரர், பென்சிலுக்கும் திருகாணிக்கும் சுவையுள்ள சாப்பாடு போட்ட பிறகு அவர்களோடு மெட்ரோவுக்குப் போனார்.

''தம்பிகளே, நீங்கள் வெளியூர்க்காரர்கள் என்பது தெரிகிறது. அப்படியானால் நீங்கள் மெட்ரோவைப் பார்க்க வேண்டும்!'' என்றார்.

தானே இயங்கும் அற்புதமான நீண்ட படிக்கட்டில் அவர்கள் மூவரும் தரையடி ரெயில் நிலையம் சேர்ந்தார்கள். நீளமான ரெயில் வண்டியில் ஏறி உட்கார்ந்து பயணத்தைத் தொடங்கினார்கள்.

''துப்புரவுச் சந்து'' என்ற பெயருள்ள நிலையத்தில் ரெயில் நின்றதும் மீசைக்காரர் நண்பர்

களிடம் கைகுலுக்கி விடை பெற்றுக் கொண்டு இறங்கிப் போய் விட்டார்.

பென்சிலும் திருகாணியும் தரைக்கு அடியில் அரண்மனை போல் இருந்த நிலையத்தை நன்ருகப் பார்ப்பதற்காக ஓடிஞர்கள். மகிழ்ச்சி பொங்கச் சிரித்தார்கள், கைகளைக் கொட்டிஞர்கள், கும்மாளம் போட்டார்கள்.

''ஆகா, என்ன அழகு!'' என்ருன் திருகாணி.

''அப்பா, பேரழகு!'' என்ருன் பென்சில். ''எனக்கு இங்கே எல்லாமே ரொம்ப ரொம்ப ரொம்பப் பிடித்திருக்கின்றன. குலை குலையாய்க் காய்த்திருக்கும் தென்னை மரங்களையும் நிசப் பொன் மீன்கள் நீந்தும் நீரூற்றுக்களையும் பூச் செடிகளையும் இங்கே வரையப் போகிறேன்! இவைகளை எல்லாம் கட்டாயம் வரைவேன்!''

சுவற்றில் முதல் கோட்டை வரைந்து கூட விட்டான். அதற்குள் கண்டிப்புள்ள ஒரு மாது, ''தம்பீ, சுவர்களைக் கறைப்படுத்தாதீர்கள். உடனே அழித்து விடுங்கள்!'' என்று அதட்டிஞள்.

''இரவு நேரத்தில் ஒருவரும் இல்லாத போது வரைய வேண்டும்'' என்ருன் தந்திரக்காரத் திருகாணி.

''சரிதான். இரவில் வரைவோம்'' என்று கண் சிமிட்டிஞன் பென்சில்.

அதனுல்தான் திருகாணியும் பென்சிலும் நள்ளிரவு வரையில் தரையடி ரெயிலில் பயணம் செய்து கொண்டிருந்தார்கள். ஒவ்வொரு நிலேயத்திலும் இறங்கிப் பார்த்து விட்டு, வேறு ரெயிலில் ஏறி, தங்களுக்கே தெரியாத ஏதேனும் நிலேயத்துக்குப் போஞர்கள். விடாக்கண்டனை உளவாளி துளேயன் பக்கத்தில் எங்கேயோ தங்களேத் துரத்தி வந்து கொண்டிருப்பதைப் பற்றி அவர்கள் எண்ணவே இல்லே.

## அத்தியாயம் முப்பத்தாறு

### இது எல்லாவற்றிலும் பயங்கரமானது

ஒரு புதிர் போடுகிறேன், விடை சொல்லுங்கள் பார்ப்போம்: ''உலகத்திலேயே மிக மிகக் குறுகிய இரவு எங்கே?'' என்னதான் யோசனே செய்தாலும் உங்களால் இதை உடனே சொல்ல முடியாது, எல்லாவற்றிலும் குறுகலான இரவு மெட்ரோவில்தான்.

மேலே, தரைக்கு உயரே, இரவு வந்து விட்டது. ஆஞல் தரையடி ரெயில் நிலேயத்தில் பட்டப் பகல் போல வெளிச்சமாய் இருந்தது. ஓசை தான் கொஞ்சம் அடங்கிப் போயிற்று.

கடைசி ரெயில் வண்டி சுருங்கைப் பாதையில் நிலேயம் நிலேயமாக ஓடிற்று. காலிப் பெட்டி

களில் ஒன்று இரண்டு பெயர் உறங்கி வழிந்தார்கள். சிறு கூடான ஓர் ஆள் அயர்ந்து தூங்கிக் கொண்டிருந்தார். மழைக்கோட்டால் தலையை மூடிப் போர்த்திருந்தார் அவர். அவருடைய வெளிறிய நீண்ட மூக்கு மட்டும் வெளியே துருத்தி, சந்தேகத்தைக் கிளப்பும் வகையில், ''கொர்ர்-ங்ங்கே; கொர்ர்-ங்ங்கே, இருக்கிறீர்கள் இங்கே, இருக்கிறீர்கள் இங்கே!'' என்று சீழ்க்கை அடித்துக் கொண்டிருந்தது.

ஆனால் ஒருவேளை நமக்குத்தான் அப்படிக் காதில் பட்டதோ என்னவோ. சிறு கூடான ஆசாமி தூங்கிக் கொண்டிருந்தார். நீங்களே பாருங்களேன், சந்தேகம் இல்லாமல் உறங்குகிறார் இவர்!

ரெயில் வண்டியோ, நிரம்ப அவசரப்பட்டது. போகிற போக்கில் இன்னும் சில நிலையங்களை அது கடந்து சென்றது. பின்பு ஒலிபெருக்கி அறிவித்தது:

''தோழர்களே, வண்டி இதற்கு மேல் போகாது. மெட்ரோ மூடப்படுகிறது. மறு சந்திப்பு வரை வணக்கம்! நல் இரவு!''

பென்சிலும் திருகாணியும் பெட்டியிலிருந்து இறங்கி, ஒரு பெஞ்சிக்கு அடியில் மறைந்து கொண்டு கப் சிப்பென்று இருந்தார்கள்.

இரவில் நகரச் சந்துகளில் இருப்பது போல

நிலையத்தில் அரை இருட்டாக இருந்தது. ஒளி விளக்குகள் அணைந்து விட்டன. மங்கலான விளக்குகள் மட்டுமே எரிந்தன. அதனால்தான் நம் நண்பர்களின் சூழ்ச்சியை ஒருவரும் கவனிக்க வில்லை. அதாவது, ஒரு நபர் தவிர யாருமே... ஆனால் அந்த நபர் யார் என்பது நமக்கு இன்னும் தெரியாது.

மேலங்கிகள் அணிந்த துப்புரவு செய்யும் மாதர்கள் நிலையத்துக்கு வந்தார்கள். நீர் தெளிக்கும் இயந்திரத்தையும் தானே இயங்கும் துடைப்பத்தையும் அவர்கள் முடுக்கி விட்டார்கள் வெகு நேரம் நிலையத்தை அலம்பித் துடைத்துக் கொண்டிருந்தார்கள். பின்பு தானே இயங்கும் படிக்கட்டில் ஏறி மேலே போய் விட்டார்கள்.

அவர்கள் போன பின் படிக்கட்டு வெறுமையாகப் போய்க் கொண்டிருந்தது. முறை வேலை மின் இணைப்பாளர் அதன் விசையை நிறுத்தினர், நிலையத்தின் வெளிக் கதவுகளைப் பூட்டி விட்டு வீட்டுக்குப் போய் விட்டார்.

விடி விளக்குகள் மட்டுமே நிலையத்தில் எரிந்து கொண்டிருந்தன.

''நேரம் வந்து விட்டது!'' என்று சொன்ன திருகாணி பெஞ்சிக்கு அடியிலிருந்து வெளியே வரப் பென்சிலுக்கு உதவினன்.

''அடேயப்பா, என்ன இருட்டு! பயமாய் இருக்கிறது!''

''பயமாய் இருக்கிறது!'' என்று யாரோ திருப்பிச் சொன்னார்கள்.

''ஐயோ!'' என்று திடுக்கிட்டான் பென்சில்.

''ஐயோ!'' என்று யாரோ கோரணி செய்தார்கள்.

ஊகித்து அறியும் திறமை உள்ள திருகாணி விளக்கினான்: ''பயப்படாதே, இது வேறு ஒன்றும் இல்லை, எதிரொலிதான். அஞ்சாதே.''

''அஞ்சாதே! அஞ்சாதே!'' என்று கூடப் பாடிற்று எதிரொலி.

''திகில் உண்டாகிறது'' என்று கிசுகிசுத்தான் பென்சில்.

''இதைச் சட்டை செய்யாதே. வரையத் தொடங்கு'' என்றான் திருகாணி.

''மாட்டிக் கொண்டீர்களா, கண்களே, இங்கேயா இருக்கிறீர்கள்! எவ்வளவோ நேரமாக உங்களைத் தேடி அலைகிறேன்!''

இப்படிச் சொன்னவன் வேறு யாரும் இல்லை, உளவாளி துளையன்தான்.

துப்புரவு செய்பவர்கள் நிலையத்தைக் கழுவிக் கொண்டிருந்த போது பக்கத்துப் பெஞ்சிக்கு அடியில் ஒளிந்திருந்தான் அவன்.

''கைகளைத் தூக்குங்கள்!'' என்று கைத்துப் பாக்கியை எடுத்துக் கொண்டு கத்தினான் துளையன்.

''ஓடுவோம், பென்சில் தம்பீ, ஓடுவோம் வா!''

சாமர்த்தியக்காரனான திருகாணி பென்சிலின் கையைப் பிடித்து இழுத்தான்.

''நில்! சுட்டு விடுவேன்!'' என்று கீச்சிட்டான் துளையன்.

''டுமீல்!..''என்று முழங்கிற்று குண்டு.''டுமீல்!'' என்றது எதிரொலி.

குண்டு விடி விளக்கைத் தாக்கவே விளக்கு சுக்கு நூறாக உடைந்து சிதறிற்று. அனேகமாகக் கும்மிருட்டு சூழ்ந்தது, மிகவும் பயங்கரமாய் இருந்தது.

''ஓடுவோம்! சீக்கிரமாக ஓடுவோம்!'' என்று கூவினான் திருகாணி.

அவர்கள் தண்டவாளத்தில் குதித்துச் சுருங் கையில் ஓடத் தொடங்கினார்கள். பகலில் ரெயில் வண்டிகள் ஒரே குதூகலமாக ஓடிய சுருங்கை இப்போது இருண்டு கிடந்தது.

நண்பர்களின் பூட்சுகள் தொப்புத் தொப் பென்று அடிப்பதைக் கேட்ட துளையன், ''எங்கே ஓடுகிறீர்கள், தம்பிகளா? நில்லுங்கள்! நான் விளையாட்டுக்கு அல்லவா! ஹ-ஹ-ஹா! நான்

வேடிக்கை செய்தேன்! நில்லுங்கள்! கப்பித்தான் உங்களுக்கு வணக்கம் தெரிவித்தார்! அட நில் லுங்களேன்! ஓஓ!.. எங்கே இருக்கிறீர்கள்?'' என்று கூவி அழைத்தான்.

ஒரு பக்கம் நகர்ந்தவன், பிளாட்பாரத் திலிருந்து விழுந்து விட்டான்.

''நாசமாய்ப் போக!'' என்று ஊளையிட்டான் துளையன்.

''..மாய்ப் போக!'' என்று திருப்பி முழங் கிற்று எதிரொலி.

உளவாளி எழுந்து கைத்துப்பாக்கியை ஆட் டியபடித் துள்ளி ஓடிஞன்.

''சீக்கிரம், பென்சில், சீக்கிரம்!'' என்று அவ சரப்படுத்திஞன் திருகாணி.

இங்கொன்றும் அங்கொன்றுமாக விளக்குகள் வழியில் எரிந்து கொண்டிருந்தன. துளையன் பின் ஞல் எங்கோ ஓடி வந்து கொண்டு கத்திஞன்:

''தப்ப மாட்டீர்கள், கழிசடைகளா! அகப் பட்டுக் கொண்டீர்கள்!''

குறுகலான தரையடி இரவு முழுவதும் இந்த மாதிரி ஓடி அடுத்த நிலையத்தை அடைந்தார் கள் அவர்கள்.

உயரே, தரைமேல் அதிகாலையில் மெட்ரோ வுக்கு வந்தார் மின் இணைப்பாளர். பையிலிருந்து

சாவிகளை எடுத்து நிலையத்தின் பெரிய கதவுகளை அவர் திறந்ததற்கும் திருகாணியும் பென்சிலும் நிறுத்தப்பட்டு விட்ட படிக்கட்டில் ஒவ்வொரு படியாக ஏறி மேலே வந்ததற்கும் சரியாய் இருந்தது.

அவர்களுக்குப் பின்னால் துள்ளி வந்த துளையன் இருவரில் ஒருவருடைய காலைப் பிடிக்க முயன்றான்.

''நில்லுங்கள்!'' என்று கெஞ்சினான் துளையன். ''நில்லுங்கள், உங்களைத் தான் சொல்லுகிறேன். நிலையம் பூட்டி இருக்கிறது! தப்ப வழி கிடையாது! வழியே கிடையாது!! வேகமாய் ஓடாதீர்கள், அசிங்கம் பிடித்த பயல்களா, இல்லாவிட்டால் எனக்கு மூச்சு முட்டுகிறது. உஸ், அப்பா, எப்படிக் களைத்துப் போனேன்!..''

சோர்ந்து போன உளவாளி இளைப்பாறுவதற்காகக் கடைசிப் படியில் உட்கார்ந்தான்.

வெளிறிப்போன பென்சிலும் ஏங்கிப்போன திருகாணியும் அவனுக்கு எதிரே நின்றார்கள்.

தப்பி ஓட வழியே இல்லை.

''எல்லாம் தொலைந்தது!'' என்று எண்ணிக் கொண்டான் பென்சில்.

''ஹெ-ஹெ-ஹே! ஹி-ஹி-ஹீ!'' என்று மகிழ்ந்து போனான் துளையன். ''உஸ், என்னமாய்க் களைத்துப்

போனேன்! கொஞ்சம் உட்காருவோம், கொஞ்சம் பேசுவோம், ஊர்ச் செய்திகளை எல்லாம். ஐயோ, உங்களிடம் எனக்கு எவ்வளவு இரக்கம் உண்டாகிறது தெரியுமா? ஹி-ஹி-ஹி! அடேய் வெற்று இரும்பு டப்பா! உன் முறுக்காணிகளை எல்லாம் கழற்றித் துண்டுகளாகப் பிரித்துப் போடுகிறேன் பார்!''

இப்படிச் சொல்லித் திருப்புளியைக் காட்டினான். திருகாணி ஆட்டுகழிகளைத் தயாரித்த இரவில் கருமானிடமிருந்து துளையன் கையாடிய திருப்புளி அது.

திடீரென்று நிலையத்தில் எங்கும் வெளிச்சம் பரவிற்று. மின் இணைப்பாளர் விளக்கு சுவிச்சைப் போட்டதனால் அப்படி.

துளையன் உட்கார்ந்திருந்த படிக்கட்டு, அது வரை அசையாதிருந்தது, எதிர்பாராத போது கிர்ரென்று இறங்கிற்று.

''என்ன அசட்டு விளையாட்டு!'' என்று சள்ளைப் பட்டான் துளையன். ''உதவி செய்யுங்கள்! நிறுத்துங்கள். ஆபத்து!''

ஆனால் அற்புதப் படிக்கட்டு கொள்ளைக்காரனை நம்முடைய களைத்துப் போன நண்பர்களிடமிருந்து தொலைவில், கீழே கொண்டு போயிற்று.

## அத்தியாயம் முப்பத்தேழு

### இதில் சேவல் அலாரம் கடிகாரம் ஆகிறது

நகரத்தில் நல்ல புது நாள் புலர்ந்தது. சோர்ந்த நண்பர்கள் வெளியே வந்தார்கள்.

''ஐயோ, எனக்கு ஒரே தூ-ஊ-ஊக்கமா ஆகவருகிறது!'' என்று கொட்டாவி விட்ட பென்சில், ''வீட்டுக்குப் போவோம் வா, திருகாணி!'' என்ருன்.

''பொறு. நாம் எந்த இடத்துக்கு வந்திருக்கிரேம், பார்!'' என்ருன் திருகாணி.

வீதி நெடுகிலும் வகை வகையான கொடிகளால் அலங்கரிக்கப்பட்டிருந்தது. மெட்ரோ நிலேயத்தில் தொங்கியது பிரமாண்டமான விளம்பரப் பலகை:

குழந்தைகளே!

நம் நகரத்தில் இன்று இளம் தொழில் வினேஞர்களின் விழா நடைபெறும். ஒவ்வொரு பையனும் ஒவ்வொரு பெண்ணும் பங்கு கொள்ளலாம். எல்லா வீட்டு முகப்புக்களிலும் வீதிகளிலும் சந்துகளிலும் உலோக உடைசல்கள் சேகரிக்கும் இயக்கம் முதலில் நடக்கும். அதிக உலோக உடைசல்கள் சேகரிப்பவர்கள்

வெற்றி பெறுவார்கள்!

வசந்த வீதியில் சரியாகப் பன்னிரண்டு மணிக்கு

இளம் தொழில் வினைஞர் அணிவகுப்பு

தொடங்கும். அணி வகுப்புக்கு ஒரு நிமிடத்துக்குப் பின் விழா

வெற்றியாளர்களுக்குப் பரிசளிப்பு.

விளையாட்டுக்கள்! திரைப்படங்கள்!

குதூகலமான கதம்ப நிகழ்ச்சிகள்!

''பென்சில், நாம் இங்கேயே இருப்போம்! அணிவகுப்பில் பரமனைத் தேடிக் காண்போம்!''

''எனக்குச் சம்மதம், ஆனால் முதலில் கொஞ்சம் உட்காருவோம் வா. எனக்கு ஒ-ரே-ஏ களைப்பாய் இருக்கிறது.''

''சரி'' என்றான் இரும்பு மனிதன். ''சற்று உட்காருவோம். எனக்குந்தான் இரும்புக் கால்கள் இல்லை...''

வீதியில் உட்கார வசதி இல்லாததால் பென்சிலும் திருகாணியும் அடர்த்தியான சின்னப் பூங்காவுக்குப் போய் மெத்தென்று இருந்த வெதுவெதுப்பான புல் மேல் படுத்தார்கள்.

கோடைகால இளங் காற்று புற்களை அசைத்தது. அவை பென்சிலுக்கும் திருகாணிக்கும் கிச்சுக்கிச்சு மூட்டின. பட்சிகள் மரங்களில் கீச்சிட்டுப் பாடின. அது தாலாட்டுவது போல் இருந்தது.

''எனக்குத் தூ-ஊ-ஊ-க்-கம் வருகிறது'' என்று சோர்வுடன் சொன்னுன் பென்சில்.

''எனக்குந்தா-ஆ-ஆ-ன்...''

''ஆனுல் நாம் அணி வகுப்பின் போது தூங்கிக் கொண்டு இருந்து விடலாமே!''

''அப்படியும் நடக்கலாம்.''

''என்ன செய்வது?''

''அலாரம் கடிகாரம் வரையேன். அதற்குச் சாவி கொடுத்து வைப்போம், சரியாக நடுப் பகலில் எழுப்பும்படி.''

''எனக்கு அலாரம் கடிகாரம் வரையத் தெரியாதே.''

''அப்படியானுல் சேவலே வரை.''

''சேவலேயா? ஹ-ஹா!'' என்று தூக்கக் கண்களேத் திறக்காமலே பலவீனமாகச் சிரித்தான் பென்சில்.

''தயவு செய்து தூங்காதே. சேவலே வரை!''

''நீ என்னேக் கேலி செய்கிருய். நான் எதற்காகச் சேவலே வரைய வேண்டும்?''

''சேவல்கள் குறித்த நேரத்தில் தான் கூவும். முன்பெல்லாம் அவை கூவுவதை வைத்து நேரத்தைக் கூடத் தெரிந்து கொண்டார்கள். சேவலே வரை. அது கணக்காகப் பகல் பன்னிரண்டு மணிக்குக் கூவும், நாம் விழித்துக் கொள்வோம்.''

அரை நிமிடம் சென்றதும் திருகாணியும் பென்சிலும் ஆழ்ந்து தூங்கி விட்டார்கள். பக்கத்தில் பெருமிதம் ததும்ப நடை போட்டது பகட்டான சேவல் கடிகாரம். பூச்சிகளைக் கொத்துவதும் பளிச்சிட்ட பல நிற வாலைச் சிலுப்புவதுமாக இருந்தது அது.

## அத்தியாயம் முப்பத்தெட்டு

இதில் பென்சிலும் திருகாணியும் கைதாகிறார்கள்

அடிபட்ட நாய் போல ஆத்திரம் பொங்க மெட்ரோவுக்கு வெளியே வந்தான் உளவாளி.

"அயோக்கியப் பயல்களா, எங்கே ஓடி விட்டீர்கள், அற்பப் பயல்களா?" என்று பெருக்காடியை எடுத்துக் கொண்டான்.

சாலையை உற்றுப் பார்த்தான், ஆனால் எந்தத் தடமும் அவனுக்குத் தெரியவில்லை. அதி காலையில் வழியோடு போனவர்கள் உளவாளியை வியப்புடன் பார்த்தார்கள். ஆகையால் துளையன் தன் பெருக்காடியைச் சட்டென்று பையில் வைத்துக் கொண்டான்.

சாலையில் வரிசையாகச் சென்றன சரக்கு லாரிகள். அவற்றின் மேல் இந்த அடையாளக் குறிப்பு இருந்தது:

"மிட்டாய்கள், சாக்லேட்டுகள், ஐஸ்கிரீம்."

மிட்டாய்களும் சாக்லேட்டுகளும் ஐஸ்கிரீமும் மிக மிக ருசியான நாற்பத்து இரண்டாயிரம் வகைத் தின்பண்டங்களும் விழாவுக்காக லாரிகளில் போயின. பசித்திருந்த உளவாளி மூக்கைச் சுரித்து, பொறாமை ததும்பிய கண்களால் லாரிகளைப் பார்த்துக் கொண்டிருந்தான்.

''கொக்-கொக்-கோ!'' என்ற சத்தம் கேட்டது. அது என்ன என்பது உளவாளி துளையனுக்குப் புரியவில்லை. சின்னப் பூங்காவிலிருந்து வந்தது அந்தச் சத்தம்.

ஆவல் உள்ள துளையன் நுனிக் கால்களால் நடந்து பூங்காவை நெருங்கி, செடிகளை எச்சரிக்கையுடன் விலக்கியவன், ஆனந்த மிகுதியால் வாய்விட்டுக் கத்தத் தெரிந்தான், ஆனால் உடனே தன் தொப்பியை வாயில் அடைத்துக் கொண்டான்.

தொப்பியைத் துப்பி விட்டு இப்படிக் கிசுகிசுத்தான் துளையன்: ''இதோ அவர்கள்! தயாராகப் படுத்திருக்கிறார்கள், பிடிபட வாக்காக! இந்தத் தடவை உங்களால் என்னை ஏய்க்க முடியாது! தூங்குங்கள், கண்களா, தூங்குங்கள்! தாலே ·லோ-தாலேலோ. இரவு வந்ததும் உங்களை எழுப்புகிறேன். ஹெ-ஹே! அடேய் இரும்புப் பொம்மை, உன்னை முதலில் நன்றாக மிரட்டுவேன், அப்புறம்

திருகாணிகளைக் கழற்றிச் சின்னச் சின்னப் பகுதிகளாகப் பிரித்துப் போடுவேன். அற்ப வண்ணம் தீற்றி, உன்னை என் கப்பலுக்குக் கொண்டு போவேன்! கண்மணியே கண்வளராய், தாலேலோ தாலேலோ...''

''கொக்-கொக்-கோ!'' என்று கோபத்துடன் கொக்கரித்தது சேவல்.

''த்ஸ்ஸ்! சாக மாட்டாத சேவல் பிணமே! எழுப்பி விடுவாய்!''

''கொக்-கொக்-கோ! கொக்-கொக்-கோ!''

''அட சே, வெந்து பொரித்த கோழிக் குஞ்சே! கொஞ்சம் பொறேன்!.. இங்கே வா. வாயேன்!..''

அவன் விரலைக் காட்டிச் சேவலை அழைத்தான். பெருமிதம் உள்ள சேவலுக்கோ, அவனை நெருங்கும் எண்ணமே இல்லை. கொள்ளைக்காரத் துளையன் பொருக்குக்களைத் தரையில் தூவுவது போல நடித்தான்.

''த்ஸ-த்ஸ-த்ஸ! இப்படி வா!''

''கொக்-கோ?'' என்று நம்பிக்கை இல்லாமல் கேட்டது சேவல்.

கொள்ளைக்காரன் முகத்தில் நல்லதனத்தை வருவித்துக் கொண்டு, ''த்ஸ-த்ஸ-த்ஸ, இங்கே வா!'' என்று இனிய குரலில் பசப்பினான்.

அசட்டுச் சேவல் கிட்டே வந்து, ''கொக்-கோ!'' என்றது.

உளவாளி நரி போல அதன் மேல் பாய்ந்தான். அலாரம் கடிகாரத்தின் ஆயுள் அதோடு முடிந்தது.

கொள்ளைக்காரன் சருகுகளைத் திரட்டி, கிளைகளை ஒடித்துத் தீ மூட்டி, சேவலின் இறகுகளைப் பிடுங்கி விட்டு நெருப்பில் வாட்டினான்.

நெருப்பிலிருந்து கிளம்பிய புகையை ஒருவரும் பார்க்கவில்லை. ஆட்கள் மறு பக்கம் பார்த்துக் கொண்டிருந்தார்கள்.

நகரத்தில் டமாரங்கள் அதிர்ந்தன, வெள்ளிக் குழல்கள் ஊதின. சிறுவர்களும் சிறுமிகளும் அணி அணியாக வீதியில் நடந்தார்கள்.

''உலோக உடைசல்களுக்காக''

என்ற விளம்பரக் குறிப்பு பொறித்த அலங்கார லாரிகள் அவர்கள் பக்கத்தில் போயின.

பெரிய இயக்கம் தொடங்கி விட்டது.

வீடுகளின் சன்னல்கள் திறந்தன. கிழவிகள் முன்மாடங்களிலிருந்து அழைத்தார்கள்:

''குழந்தைகளா, என்னிடம் வாருங்கள்! என்னிடம் பழைய தேநீர்க் கெண்டி இருக்கிறது. அதை மேற்கொண்டு பழுது பார்க்க முடியாது!''

''பிரமாத உடைசல் தான் போ! என்னிடம் பெரிய கொதிகலம் — சமவார் — இருக்கிறது. நான் அதைக் கயிற்றில் கட்டி இறக்குகிறேன், பிடித்துக் கொள்ளுங்கள் குழந்தைகளே.''

''எங்களிடம் வாருங்கள் குழந்தைகளே! எங்களிடம்!'' என்ற அழைப்புக்கள் நாலா பக்கங்களிலுமிருந்து வந்தன.

தேவை இல்லாத பல வகை உலோகச் சாமான்களை ஆட்கள் தாங்களே கொண்டு வந்தார்கள். ஓட்டை விழுந்த வாணலிகள், நசுங்கிய தேநீர்க் கெண்டிகள், பழைய சைக்கிள் சக்கரங்கள் முதலிய பல வகைச் சாமான்களைச் சிறுவர்கள் லாரிகளில் ஏற்றினார்கள்.

டமாரங்கள் அதிர்ந்தன, எக்காளங்கள் முழங்கின, ஆனால் திருகாணியும் பென்சிலும் எதையும் கேட்காமல் அயர்ந்து தூங்கிக் கொண்டிருந்தார்கள்.

கொள்ளைக்காரன் சேவலின் எலும்புகளைக் கறவி இறைச்சியை மிச்சம் வைக்காமல் தின்றுவிட்டு இரை எடுத்த நாய் போல உறுமினான்.

''ஆகா, என்ன ருசி! அந்த வண்ணம் தீற்றியைத் தினந்தோறும் கோழி வரையச் செய்வேன். வாட்டுவதுதான் பிடிக்காத தொல்லை. அதற்கென்ன, பொரித்த கோழியை வரையச் செய்

வேன், ஹெ-ஹே!'' என்று சொல்லிக் கொண் டான்.

நகர மணிக் கூண்டில் கடிகாரம் பன்னிரண்டு மணி அடித்தது. பெரிய இசைக் குழு குதூகல மான மெட்டை இசைத்தது. இளம் தொழில் வினைஞர்களும் இளம் நிபுணர்களும் வசந்த வீதி யில் அழகிய அணிகளாக நடந்தார்கள்.

அவர்களுக்கு நடுவில் நடந்தான் மாயச் சிறு வன் பரமன்.

விமானங்கள், ராக்கெட்டுகள், செயற்கைத் துணைக் கோள்கள், கப்பல்கள், கார்கள், அறுவடை இயந்திரங்கள் முதலியவற்றின் ஆயிரம் வகை யான மாதிரிகளைச் சிறுவர்கள் எடுத்துச் சென் றார்கள். விமானங்களின் உந்து விசிறிகள் இரைந் தன. செயற்கைத் துணைக் கோள்கள் குறியீடு களை ஒலித்த வண்ணம் தலைகளுக்கு மேலே சுழன் றன. ராக்கெட்டுகள் கைகளிலிருந்து நீல வானில் கிளம்பிப் பாய முயன்றன.

நகரவாசிகள் வீடுகளின் முன்மாடங்களிலிருந்து ''ஹுர்ரே!'' என்று வெற்றி முழக்கம் செய்து மலர்களை வீசினார்கள். சிறுவன் பரமன் எடுத்துச் சென்ற விளம்பரப் பலகையை எல்லோரும் ஆவ லுடன் பார்த்தார்கள்:

"உலோக உடைசல் எப்படியும்
கிலோ திரட்டியே விடுவோம்!"

திருகாணியும் பென்சிலும் பரமனைப் பார்க்க வில்லை.

''தாலேலோ—தாலேலோ!'' என்று சீறினன் கொள்ளைக்காரன்.

நகருக்கு மேலேயோ, பல வண்ண பலூன் களும் புறாக் கூட்டங்களும் பறந்தன. வெற்றிச் சதுக்கத்தில் உயரமான வெற்றியாளர் மேடை மேல் ஏறினார்கள் வெற்றி பெற்றவர்கள்— மகிழ்ச்சியில் திளைத்த மூன்று பெண்களும் குதூ கலம் பொங்கிய மூன்று பையன்களும்.

சைக்கிள்களும் புகைப்படக் காமிராக்களும் அவர்களுக்குப் பரிசளிக்கப்பட்டன.

''ஹுர்ரே! ஹுர்ரே!'' என்று வெற்றி முழக் கம் செய்தார்கள் எல்லோரும்.

திருகாணி விழித்துக் கொண்டான். ஒரு கண்ணைத் திறந்தவன், உளவாளியைக் கண்ட தும் உடனே கண்ணை மூடிக் கொண்டு விட்டான்.

''ஐயோ, எவ்வளவு பயங்கரமான சொப்ப னம் கண்டேன் தெரியுமா?''

''இது சொப்பனம் இல்லை. நாம் கைதாகி விட்டோம்!'' என்றான் முன்பே கண் விழித் திருந்த பென்சில்.

''கூச்சல் போடாமல் அமைதியாய் இருங்கள்!'' என்று கைத்துப்பாக்கியை எடுத்துக் கொண்டான் கொள்ளைக்காரன். ''அசையாமல் உட்கார்ந்திருங்கள். இருட்டியதும் என்னோடு வருவீர்கள்!'' என்றான்.

''எங்கள் பரமன் எங்கே?'' என்று பெருமூச்சு விட்டான் பென்சில். ''நாங்கள் இல்லாவிட்டால் அவன் வீணாகி விடுவான்! அவன் இன்னும் சின்னப் பையன்...''

## அத்தியாயம் முப்பத்தொன்பது

இதில் கடல் கொள்ளைக்காரன் பென்சிலுக்கும் திருகாணிக்கும் உதவுகிறான்

விழாக்கள் எதனாலோ விரைவில் முடிந்து விடுகின்றன.

மாலை ஆயிற்று. மகிழ்ச்சி நிறைந்த நகரவாசிகள் பாட்டுக்கள் பாடினார்கள், நடனம் ஆடினார்கள். ஐஸ்கிரீமும் மிட்டாய்களும் சாக்லேட்டும் வாங்கினார்கள்.

ஆனால் ஏங்கிய இரண்டு நண்பர்களும் குதூகலித்த ஒரு கொள்ளைக்காரனும் சந்தடியே இல்லாத, வெறிச்சோடிய சந்துகளில் திரிந்தார்கள்.

''உன்னுடைய திருகாணிகளை நான் கழற்றப் போவதில்லை. உன்னை ஆற்றில் எறிந்து விடுவேன்! நீ இரும்பால் ஆனவன், தண்ணீர் உனக்குப் பிடிக்காது...'' என்று நையாண்டி செய்தான் கொள்ளைக்காரன்.

தன்மானம் உள்ள திருகாணி, இரும்பு மனிதன், பதில் பேசவில்லை. மாய ஓவியன் பென்சிலை எப்படிக் காப்பாற்றுவது என்றே எண்ணமிட்டுக் கொண்டிருந்தான் அவன். ஆனால் கைத் துப்பாக்கி, மிகப் பெரிய, பயங்கரமான கைத் துப்பாக்கி! உலகில் மிகப் பெரிய வீரன், மிகுந்த பலசாலி கூடக் கைத்துப்பாக்கிக்கு அஞ்சுகிறான். சின்னத் திருகாணியும் அஞ்சினான்.

''நடவுங்கள்! நடவுங்கள்!'' என்று கட்டளை இட்டான் துளையன். ''அதோ கப்பல் தெரிகிறது! அருமையான கப்பல்!''

அமைதித் துறையில் ஆற்றின் கரைக்கு வந்தார்கள் அவர்கள். மூன்று பாய்கள் கொண்ட ''பரமன்'' என்ற கப்பல் அங்கே நின்று கொண்டிருந்தது. அவர்களுக்கு எதிரே ஓடி வந்தான், யார் என்று நினைக்கிறீர்கள்?

கப்பித்தான் களகளன்!

''நாம் தொலைந்தோம்! முடிவு! விடை கொடு, திருகாணி!'' என்று கிசுகிசுத்தான் பென்சில்.

ஆனால் கொள்ளைக்காரன் துலையன் எதற்காக இப்படி நடுங்கினான்?

''துரோகி! கடைகெட்ட துரோகி! துரோகிப் பயலே!'' என்று பக்கத்தில் ஓடி வந்து இரைந்தான் கப்பித்தான் களகளன்.

''என் கிட்டே நெருங்காதேயுங்கள்! சுட்டு விடுவேன்!'' என்று கீச்சிட்ட துலையன், கைத் துப்பாக்கியைக் கடல் கொள்ளைக்காரனுக்குக் குறி வைத்தான். ஆனால் அவன் பிடித்திருந்தது கைத்துப்பாக்கி அல்ல போலவும், வண்ணம் பூசுபவனின் தூரிகை போலவும், இந்தத் தூரிகையால் அவன் சுவற்றுக்கு வண்ணம் பூசியது போலவும் நடுங்கிற்று அவனுடைய கை. அங்கும் இங்கும், அங்கும் இங்குமாக.

கடல் கொள்ளைக்காரன் சூறுவளி போலப் பாய்ந்து தாக்கினான். துலையன் சுண்டெலி போலக் கீச்சிட்டான். ஒருவர் மேல் ஒருவர் குத்து மழை பொழிந்தபடி இரண்டு கொள்ளைக்காரர்களும் வீதித் தரையில் உருண்டார்கள்.

''கொல்லுகிறானே!.. உதவிக்கு வாருங்கள்! ஐயோ, அம்மா!'' என்று அலறினான் துலையன்.

''அசிங்கம் பிடித்த சேற்றுப் புழுவே!'' என்று கத்திக் கூட்டாளியின் மூக்கை உடைத்தான் கடல் கொள்ளைக்காரன்.

''இனிமேல் இப்படிச் செய்ய மாட்டேன். வேடிக்கைக்குச் செய்தேன்! விளையாட்டுக்குச் செய்தேன்!'' என்று வீரிட்டான் துளையன்.

''வேடிக்கைக்குப் பரிசு இந்தா! ஓடில்லாத நத்தைப் பயலே!'' என்று துளையனுடைய காதில் ஓங்கிக் குத்தினன் கடல் கொள்ளைக்காரன்.

''நான் பென்சிலைத் தேடிக் கொண்டிருந்தேன்! பிடித்து விட்டேன்! நான் நல்லவன்! நிரம்ப நேர்மை உள்ளவன்!..''

கூட்டாளியின் உச்சந் தலையிலிருந்து ஒரு கொத்து மயிரைப் பிய்க்கப் போன கடல் கொள்ளைக்காரன் சண்டையை நிறுத்தினன்.

''இதை உடனே சொல்வதற்கென்ன? எங்கே, காட்டு பென்சிலை!''

''கா-ஆ-ட்-டாம்!'' என்று ஏளனம் செய்தான் உளவாளி துளையன். முடிந்தால் தானே! அவர்கள் ஓடி விட்டார்களே! ஐயோ, ஒரே வலி! ஆஆஆஆ...''

''விரட்டிப் பிடிப்போம்! வா என் பின்னே! மைக்கறை, நாய்ப் பிறவி, பிடி மோப்பம், போ முன்னே!'' என்று உத்தரவிட்டான் கடல் கொள்ளைக்காரன்.

துளையன் கண்ணீரைத் துடைத்துக் கொண்டு அவனைத் தொடர்ந்தான்.

# அத்தியாயம் நாற்பது

## இது எல்லாவற்றையும் விடத் துயரம் நிறைந்தது

பென்சிலும் திருகாணியும் வானவில் பாலத்தின் உயரமான வளைவுக்கு அடியில் ஒளிந்து கொண்டார்கள். ஆனால் அவர்கள் பதுங்கிய இடத்துக்குப் பாய்ந்து வந்தது சடைநாய் மைக்கறை.

''பூனை! சட்டென்று ஒரு பூனையை வரை!'' என்று கிசுகிசுத்தான் திருகாணி. மயிரைச் சிலுப்பிக் கொண்டு நின்ற முரட்டுப் பூனையை நடுங்கும் கையால் வரைந்தான் பென்சில்.

சடைநாயைக் கண்டதும் பூனை முதுகை வளைத்து இகழ்ச்சியுடன் மியாவ் என்று கத்திற்று.

இந்தத் துடுக்கைப் பொறுக்க முடியாத சடைநாய் காதைத் துளைக்கும்படிக் குலைத்துக் கொண்டு பூனை மேல் பாய்ந்தது. பூனை சந்தில் புகுந்து மறைந்தது. நாயும் அதைத் தொடர்ந்து கொள்ளைக்காரர்களும் சந்தில் புகுந்தார்கள்.

திருகாணியும் பென்சிலும் அமைதித் துறையில் ஓடினார்கள்.

''வள்-வள்!'' என்ற குலைப்பு பின்னே தொலைவில் கேட்டது.

''இன்னும் விரைவாய் ஓடு, பென்சில்! வேகத்தை அதிகம் ஆக்கு!..''

அதற்குள் கொள்ளைக்காரர்கள் அசட்டு நாயைத் திட்டி நொறுக்கியபடி அமைதித் துறைக்கு ஓடி வந்தார்கள்.

தப்பிய பென்சிலும் திருகாணியும் வீடுகளின் கதவுகளைத் தடதடவென்று தட்டி, உதவிக்கு வரும்படி ஆட்களை அழைத்தார்கள். ஆனால் ஒரு வரும் அவர்களுக்குக் கதவைத் திறக்கவில்லை. எல்லோரும் வசந்த வீதிக்குப் போயிருந்தார்கள்.

ஒரு சந்தில் கார் ஒன்று அவர்களைக் கடந்து சென்றது. வெறும் கார் அல்ல, நீர் தெளிக்கும் கார். வீதியிலும் நடைபாதையிலும் செடிகள் மேலும் மரங்கள் மேலும் தூய குளிர் நீரைத் தெளித்துக் கொண்டு போயிற்று அது.

கைகளை வீசி ஆட்டிக் கொண்டு பென்சிலும் திருகாணியும் காரோட்டியிடம் ஓடினார்கள்.

''மாமா, நிறுத்துங்கள்! எங்களை ஏற்றிக் கொள்ளுங்கள்! கொள்ளைக்காரர்கள் எங்களைத் துரத்திப் பிடிக்க வருகிறார்கள்!'' என்று கெஞ்சினார்கள்.

ஆனால் காரோட்டி காது கொடுத்துக் கேட்கவில்லை. ''சரியான ஆட்கள் அப்பா இந்தப் பசங்கள்! இராத்திரி வேளைகளில் கூட என் கார் தெளிக்கும் தண்ணீரில் குளிக்கப் பார்க்கிறார்கள்'' என்று எண்ணியபடி, பென்சிலையும் திருகாணி

யையும் தொப்பலாக நனைத்து விட்டுப் போய்ச் சேர்ந்தார்.

''வள்-வள்-வள்!''

கொள்ளைக்காரர்கள் அவர்களை நெருங்கி விட்டார்கள்.

''பொறு'' என்று திருகாணியிடம் சொன்னான் பென்சில். ''நான் துவாலை வரைகிறேன். நீ உடம்பு துடைத்துக் கொள்ள வேண்டும். இல்லாவிட்டால் உன் நனைந்த உடம்பு துருப்பிடித்து விடும்.''

''நேரம் இல்லை! சீக்கிரம்! சீக்கிரம்! ஓடுவோம்!''

ஆனால் திருகாணி பிந்துவதைப் பென்சில் சட்டென்று கவனித்தான்.

''ஐயோ! உன் முகம் எப்படிச் சோர்ந்து போய் விட்டது! உனக்கு உடம்புக்கு வந்து விட்டதோ?''

''எனக்குத் துரு ஏறுகிறது, என்னால் வேகமாக ஓட முடியவில்லை'' என்று எண்ணிக் கொண்ட இரும்பு மனிதன், ''நான் வேண்டுமென்றே பின் தங்குகிறேன்! எனக்குத் தெரியும் என்ன செய்ய வேண்டும் என்று! நான் சண்டை போடப் போகிறேன்!'' என்றான்.

''உனக்கு உடம்பே சரியாய் இல்லையே!''

''இல்லை, என் உடம்புக்கு ஒன்றும் இல்லை!

ஓடு சீக்கிரம்! அவர்கள் பிடிக்க விரும்புவது உன்னைத்தான், என்னை அல்ல. நீதான் கொள்ளைக் காரர்களுக்கு வேண்டும்! ஓடு! நான் சண்டை போடப் போகிறேன்! இந்தப் பயல்களுக்குச் சரியான பாடம் கற்பிக்கிறேன்! அவர்களுடைய மண்டைகளில் முழைப்புக்கள் உண்டாக்கு கிறேன்! நான் ரொம்ப ரொம்பத் துணிச்சல் உள்ளவன்! ரொம்ப ரொம்பப் பலசாலி! நீயே பார்ப்பாய்!''

திருகாணி ஆயத்தமாய் இருக்கும் குத்துச் சண்டை வீரன் போலத் துள்ளி, கைகளைக் குத்தும் பாங்கில் வீசி ஆட்டவே, பென்சில் அவனை நம்பி விட்டான்.

''சரி, நான் ஓடுகிறேன்! மிலீஷியாவைக் கூப்பிடுகிறேன்!

நண்பனைத் தழுவி முத்தமிட்டு விட்டு அவன் ஓடிப் போனான்.

''ஆகா, மாட்டிக் கொண்டாயா? எங்கே பென்சில்?'' என்று திருகாணியைப் பார்த்துக் கத்தினான் கடல் கொள்ளைக்காரன்.

''பென்சிலை நீங்கள் காண மாட்டீர்கள்!''

''இதோ உன்னை உதைக்கிறேன்?'' என்று வெறிக் கூச்சல் போட்டான் கடல் கொள்ளைக் காரன்.

''அட தாடிக்காரத் துடைப்பக் கட்டை! வா இங்கே, உன் தாடியை மொட்டை ஆக்கி விடுகிறேன்!'' என்ருன் திருகாணி.

''என்ன சொன்ஞெ-ஆ-ஆ-ஆய்?'' என்று வன்மத்துடன் கத்திய கப்பித்தான் களகளன் ஆத்திரத்தால் கறுத்துப் போனுன்.

''அடி!'' என்று தூண்டிஞன் உளவாளி துலேயன். ''டேய், திருகாணி, பென்சிலே ஒப்படைத்து விடு, இல்லேயோ, சுட்டு விடுவேன்!'' என்ருன்.

ஆனுல் சிறு இரும்பு மனிதன் தளரவில்லே. அவன் கிலுங்கிக் கிலுங்கிச் சிரித்தான்!

அப்போது உளவாளி தன் பயங்கரமான கைத்துப்பாக்கியை அவனுக்குக் குறி வைத்துச் சுட்டான்.

குண்டு திருகாணியின் மார்பில் பட்டுக் கணீரென்ற ஓசையுடன் தெறித்து விழுந்தது.

''குண்டு என்னேத் துளேக்கவில்லே! ஹுர்ரே! என்று சுருள் கம்பிகளில் துள்ளிக் குதித்துக் கொள்ளேக்காரத் துலேயனே இரும்புத் தலேயால் இடித்தான் திருகாணி.

துலேயன் தடாரென்று தரையில் விழுந்தான்.

கடல் கொள்ளேக்காரன் மேல் ஒரு குத்து விட்டு, ''வெற்றி!'' என்று ஆர்ப்பரித்தான் திருகாணி.

கப்பித்தான் களகளன் வலி தாங்க மாட்டாமல் கூப்பாடு போட்டான். ஆனல் காயமடைந்த திருகாணி, துரு ஏறிய திருகாணி, தானும் நிலைத்து நிற்க முடியாமல் விழுந்து விட்டான்.

அவன் விழுந்தான். அவனுடைய கண்களுக்கு முன்னல் எல்லாம் ஊசலாடின. சடைநாய் மைக்கறை அவன் குதிக்காலை வெடுக்கென்று கடித்தது.

தாடிக்காரக் கொள்ளைத் தலைவன் அவன் மேல் குத்துக்களைப் பொழிந்தான்.

தரையில் கிடந்த உளவாளி துளையனே, ''அடி! இவனுடைய வலு தீர்ந்து கொண்டிருக்கிறது!'' என்று தூண்டினன்.

திருகாணி துள்ளிப் பாயவே தாடிக்காரன் பற்கள் கடகடக்க உளவாளி மேல் தடாலென்று விழுந்தான்.

''காப்பாற்றுங்கள்!'' என்று மூச்சு திணறக் கத்தினன் துளையன்.

''வெற்றி!'' என்ற திருகாணியின் குரல் அனேகமாக வெளியில் கேட்கவில்லை. அவனுடைய கைகளும் கால்களும் மிகுந்த சிரமத்துடனேயே அசைந்தன.

தந்திரக்கார உளவாளி விளையாட்டுச் சாமான்கள் விற்கும் கடையில் தான் திருடிய காந்தத்தை

மற்றவர்கள் காணுதபடி எடுத்துத் திருகாணியின் பக்கம் நீட்டினுன். இரும்பு மனிதன் உடனே உணர்வு இழந்து விழுந்தான். அவன் காந்தத் துடன் ஒட்டிக் கொண்டு விட்டான்.

''ஹெ-ஹே! வெற்றி!'' என்று கம்மிய குரலில் சொன்னுன் துளையன்.

''வெஏற்-றி! இவனைக் கட்டிப் போட வேண் டும்!'' என்று வாய்க்குள் முனகினுன் கப்பித்தான் களகளன்.

பாவம், திருகாணியைக் கட்டிப் போட்டார் கள் கொள்ளைக்காரர்கள்.

''அசிங்கம் பிடித்த இரும்புப் பயலே, இப் போதுதான் நான் உன் திருகாணிகளைக் கழற்றிச் சின்னச் சின்னத் துணுக்குகளாக உன்னைப் பிரித் துப் போடுவேன்!''

அவன் திருப்புளியை எடுத்துக் கொண்டான். கொல்லனிடமிருந்து அவன் திருடின அதே திருப் புளி இது. அவன் அதை முதலில் ஒரு நுனியில் பிடித்துக் கொண்டான், பின்பு மறு நுனியில் பிடித்துக் கொஞ்சம் சுழற்றினுன், எதற்காகவோ மோந்து கூடப் பார்த்தான். ஆனுல் இந்த மாதி ரிக் கருவியை எப்படிக் கையாள்வது என்பது கொள்ளைக்காரர்களுக்குத் தெரியவில்லை. திருப் புளியால் வேலை செய்ய இதற்கு முன்னுல் அவர்

களுக்கு வாய்த்ததே கிடையாது. ஆகையால் அவர்கள் செய்த முயற்சிகள் பலிக்கவே இல்லே.

துளேயன் திருப்புளியை எறிந்தான். அது கணகணத்து எங்கோ விழுந்து மறைந்தது.

''அங்கே துளேயா?'' என்று கேட்டுக் கொண்டான் தாடிக்காரக் கொள்ளேத் தலேவன்.

''என்னேயா கூப்பிட்டீர்கள்? நான் இங்கே இருக்கிறேன்'' என்றுன் துளேயன்.

''நான் உன்னேக் கூப்பிடவில்லே, வீதித் தரையில் ஒரு துளேயும் அதன் மேல் கிராதியும் தெரிகின்றனவே, அவற்றைச் சொன்னேன்'' என்றுன் கடல் கொள்ளேக்காரன்.

மெய்யாகவே, இரும்புக் கிராதியால் மூடப்பட்ட சிறு திறப்பு வீதித் தளத்தில் இருந்தது. ஒவ்வொரு நகரிலும் வீதித் தரையில் இந்த மாதிரிக் கிராதிகள் கொண்ட திறப்புக்கள் இருக்கும். இவை நீர் போவதற்கான வடிகால்கள். மழைத் தண்ணீர் இதன் வழியாகத்தான் வடியும்.

உளவாளியின் கண்கள் பளிச்சிட்டன.

''திருகாணியை அங்கே எறிவோம்! அங்கே தண்ணீர் பாய்கிறது. ஹெ-ஹே, ஆற்றில் பாய்கிறது! திருகாணி மூழ்கி விடுவான், நம்மை ஒரு போதும் தாக்க மாட்டான்!''

''தண்ணீர் எங்கே பாய்கிறதோ, அறியேன். ஆனால் வண்ணாந்தீற்றிப் பயல் பென்சில் தானாகவே என்னிடம் பாய்ந்து வருகிறான்!'' என்று முழங்கினான் கப்பித்தான் களகளன்.

ஆளற்ற இருண்ட சந்தில் தலை தெறிக்க ஓடி வந்து கொண்டிருந்தான் பென்சில். குண்டு வெடித்த சத்தம் அவன் காதுக்கு எட்டி விட்டது. நண்பனுக்கு உதவி செய்வதற்காக அவன் ஓடி வந்தான்.

''திருகாணியை ஒன்றும் செய்யாதீர்கள்! அவன் மேல் இரக்கம் காட்டுங்கள்!''

''அதற்கென்ன, தாராளமாக!'' என்று கிண்டல் செய்த உளவாளி துளையன் அசைய முடியாத திருகாணியை வடிகால் கிராதியின் பக்கத்தில் இழுத்தான்.

ஆயுதங்கள் பிடித்திருந்த கொள்ளைக்காரர்கள் மேல் ஆத்திரத்துடன் பாய்ந்தான் பென்சில். அவன் அழுதான், கூச்சல் போட்டான், கால்களை உதைத்தான். ஆனால் கொள்ளைக்காரர்கள் அவனைக் கட்டிச் சாக்குப் பையில் திணித்து விட்டு, திருகாணியை வடிகால் கிராதியில் எறிந்து விட்டார்கள்.

கீழே தண்ணீர் களகளத்துப் பெருகிய சத்தம் கேட்டது...

சின்ன இரும்பு மனிதன் மடிந்து விட்டான்! திருகாணி இறந்து போனுன்! பென்சிலேக் கொள்ளேக்காரர்கள் கொண்டு போய் விட்டார்கள்! என்ஞல் மேற்கொண்டு கதை சொல்ல முடியாது. வேறு ஒரு வார்த்தை கூடச் சொல்ல மாட்டேன், இந்த வார்த்தை தவிர:

முற்றும்

## அத்தியாயம் நாற்பத்தொன்று

### இதில் வேனியா காஷ்கின் உலோக உடைசல்கள் சேகரிக்கிருன்

நான் மேற்கொண்டு ஒன்றுமே சொல்ல விரும்பவில்லே, ஆஞல் சந்தில் திடீரென்று வந்து விட்டான் வேனியா காஷ்கின். வேனியாவுக்கு மனமே சரியாய் இல்லே. அவனுந்தான் உலோக உடைசல்கள் சேகரித்தான், ஆஞல் அணி வகுப்புக்கு அவன் அழைக்கப்படவில்லே. முதலில் வீதியிலிருந்த குப்பைத் தொட்டியைக் கொண்டு போஞன். தேர்வுக் குழுவினர் அதை ஏற்கவில்லே.

''இது உடைசல் அல்ல. இது மிகவும் பயனுள்ள சாமான். அட்டைத் தம்ளர்களிலோ காகிதங்களிலோ ஐஸ்கிரீம் வாங்கும் சிறுவர்களுக்குக் குப்பை போட இது உதவுகிறது...'' என்ருர்கள்.

அவர்கள் சொன்னது முழுவதையும் கேட்க வேனியாவுக்குப் பொறுமை இல்லே. எரிச்சலுடன்

அதே குப்பைத் தொட்டியில் துப்பி விட்டு, சதுக்கத்தின் நட்ட நடுவில் அதை வைத்தான். தொலைக்காட்சி பார்ப்பதற்காக வீட்டுக்குப் போனான்—மனத்தாங்கலுடன்தான்.

வேனியா காஷ்கின் தொலைக்காட்சிப் பெட்டியின் விசையைப் போட்டான். எந்த விழாவுக்குத் தான் அழைக்கப்படவில்லையோ அதைத் தொலைக்காட்சித் திரையில் கண்டான்.

சிறுவர்களும் சிறுமிகளும் களி கொண்டாடியதை வெகு நேரம் பார்த்துக் கொண்டிருந்தான் வேனியா. ''பிரமாதமாக்கும் இரும்பைப் பொறுக்கிச் சேர்ப்பது! இந்த மாதிரி அற்பக் காரியங்களில் நான் ஈடுபடப் போவதில்லை!'' என்று மனதுக்குள் சொல்லிக் கொண்டான்.

தொலைக்காட்சித் திரையிலோ, வேனியா குப்பைத் தொட்டியை வைத்து விட்டு வந்த அதே சதுக்கத்தில் எல்லோரும் கும்மாளம் போட்டு நடனம் ஆடினார்கள். ஐஸ்கிரீம் வைத்த வெற்றுக் காகிதத் தம்ளர்களைச் சிறுவர்களும் சிறுமிகளும் குப்பைத் தொட்டியில் எறிந்தார்கள்.

வேனியா தொலைக்காட்சிப் பெட்டியின் விசையை நிறுத்தினான். அவனுக்கு ஒரே சலிப்பாய் இருந்தது. வெளியே போனான். அமைதித் துறையில் நடந்து கொண்டிருந்த போது கோடி

வீட்டு முனையில் மூட்டையோடு இரண்டு ஆட்கள் திரும்பினது போல அவனுக்குத் தெரிந்தது.

சீழ்க்கை அடித்துக் கொண்டு வீதித் தரையைப் பார்வையிட்டான் வேனியா. துப்புரவாக அலம்பி விடப்பட்ட வீதித் தரையில் வடிகால் கிராதி தவிர வேறு எதையும் காண முடியாது—யாரும் எதையும் தவற விடாவிட்டால்.

வேனியா கிராதியை நெருங்கி, அதன் பக்கமாக நடந்தான்.

அங்கே எதுவோ பளிச்சிட்டது.

கிராதியின் இடுக்கில் கையை விட்ட வேனியா, காந்தத்தையும் அதோடு இரும்பு மனிதன் திருகாணியையும் வெளியில் எடுத்தான்.

இருக்க முடியாது! மெய்யாகவே, திருகாணியையா?

ஆமாம், திருகாணியை! இரும்பு மனிதன் தரைக்கு அடியில் விழவில்லை. காந்தம் இரும்புக் கிராதியில் ஒட்டிக் கொண்டது. திருகாணி காந்தத்தில் தொங்கினான். அவனுக்குக் கீழே களகளத்து ஓடிக் கொண்டிருந்தது தண்ணீர். ஆனால் திருகாணி எதையும் காணவோ கேட்கவோ இல்லை.

"இரும்பு! உலோக உடைசல்! நானே கண்டெடுத்தேன்! இதற்காக எனக்கு சைக்கிள் பரிசு கிடைக்கும். அதோடு புகைப்படக் காமிரா

வும் கிடைக்கும். எல்லோரும் பொறாமையால் வெடித்துப் போவார்கள்... வெற்றிச் சதுக்கத்துக்கு ஓடுகிறேன்!'' என்று மகிழ்ந்தான் வேனியா காஷ்கின்.

இரும்பு மனிதனை வீசி ஆட்டியபடி ஓடினான்.

வெற்றிச் சதுக்கத்தில் இருந்த இளம் தொழில் வினைஞர்கள் அலுவலகத்துக்குப் போய், தான் கண்டு எடுத்ததைப் பெருமையுடன் நீட்டினான்.

''அருமை!'' என்று பாராட்டினார்கள் தேர்வுக் குழுவினர். ''இன்னது என்று தெரியாத துருப் பிடித்த பகுதிகளை நீ கொண்டு வந்திருக்கிறாய். ஆனால் இரும்பு கெட்டியானது, அசலானது. மறுபடி உருக்கி வார்ப்பதற்காக இதைத் தொழிற் சாலைக்கு அனுப்புவோம். இந்த இரும்பால் தொழிலாளர்கள் விளையாட்டுச் சாமான்கள், அல்லது ஒருவேளை அசல் கார் தயாரிப்பார்கள். உனக்கு ஐஸ்கிரீம் வேண்டுமா?''

''புகைப்படக் காமிராக்கள் எங்கே?''

''காமிராக்கள் இல்லை.''

''சரி! சீக்கிரமாக எனக்குச் சைக்கிள் கொடுங்கள், காமிரா வாங்க நாளைக்கு வருகிறேன்.''

''எல்லாச் சைக்கிள்களையும் நம்முடைய வெற்றியாளர்களுக்குக் கொடுத்து விட்டோம்.

ஒரு கிலோ தொண்ணூறு கிராம் எடை உள்ள இரும்பு உடைசலை நீ கொண்டு வந்திருக்கிறாய். முதல் வெற்றியாளன் சேகரித்த உடைசல்களின் எடை இருபத்தொரு கிலோகிராம்...''

வெறுங் கைகளோடு வெளியேறின வேனியா வீதிகளில் சுற்றித் திரியலானான். சதுக்கத்தில் இருந்த குப்பைத் தொட்டி திடீரென்று அவன் பார்வையில் பட்டது. அவன் உலோக உடைசல் என்று கொடுக்க எடுத்துப் போன அதே தொட்டி.

''ஆ, மாட்டிக் கொண்டாயா?''

அளவில்லாத ஆத்திரத்துடன் அதை உதைத்துத் தள்ளினான் வேனியா.

தொட்டி கடகடவென்று உருண்டது. வெற்றுக் காகிதத் தம்ளர்கள் சிதறின. எல்லோரும் விழாக் கொண்டாட்டத்தில் ஈடுபட்டிருந்ததால் யாரும் எதையும் கவனிக்கவில்லை.

வேனியா தொட்டியை மறுபடி நெருங்கி, இன்னொரு தரம் உதைத்துத் தள்ளி, அமைதித் துறையின் திக்கில் அதனுடன் ஓடினான்.

''எல்லாவற்றுக்கும் பொறுப்பாளி நீதான்!'' என்று தொட்டி மேல் எரிந்து விழுந்தான் வேனியா. ''ஆணியால் உன்னை ஓட்டையாக்கி அப்புறம் உலோக உடைசல் என்று கொடுப்பேன். நீ பயனுள்ள சாமான் என்று அப்போது ஒருவரும்

சொல்ல மாட்டார்கள்!.. இல்லை, நான் உன்னை ஒட்டை ஆக்கப் போவதில்லை. சைக்கிள்கள் தான் மேற் கொண்டு இல்லையாமே! உன்னை ஆற்றில் எறிந்து விடுகிறேன். கை கொட்டிச் சிரிப்பதற் காக!''

சந்தடி இல்லாத சந்துகள் வழியாகத் தொட்டியைக் கடகடவென்று உருட்டிக் கொண்டு அமைதித் துறையை, இரவு நேர ஆற்றை நெருங்கினான் வேனியா காஷ்கின்.

## அத்தியாயம் நாற்பத்திரண்டு

இதில் வேனியா காஷ்கின் கடல் கொள்ளைக்காரன் ஆகி, ''அம்மா!'' என்று கத்துகிறான்

கப்பலில் கொள்ளைக்காரர்கள் மூட்டையை அவிழ்த்து உதறிப் பென்சிலை வெளியில் எடுத்து அவனுடைய கட்டுக்களையும் அவிழ்த்து விட்டார் கள். துளையன் அவனை நைச்சியம் பண்ண முயன் றான்.

''அருமைப் பென்சில், நாங்கள் உன்னை ரொம்பவும் கொஞ்சிக் கேட்கிறோம். முதலில் எங்க ளுக்கு இனிப்புப் பணியாரம் வரைந்து கொடேன்'' என்றனர்.

''ஒரு பீப்பாய் மது!'' என்றான் கடல் கொள்ளைக்காரன். புத்தகங்களில் வரும் அசல் கடல்

கொள்ளைக்காரர்கள் எல்லோரையும் போலவே அவனும் மது அருந்த மிகவும் ஆசைப்பட்டான். ''மது வேண்டும்! என் தொண்டை வறண்டு போய் விட்டது!'' என்று கத்தினான்.

''நான் ஒன்றுமே வரையப் போவதில்லை. நீங்கள் திருகாணியைக் கொன்று விட்டீர்கள். நான் செத்துப் போனாலும் போவேனே தவிர வரைய மாட்டவே மாட்டேன்!'' என்று தணிந்த குரலில் உறுதியாகச் சொன்னான் பென்சில்.

''மாட்டாயோ?'' என்று முறைத்தான் கடல் கொள்ளைக்காரன். ''இதோ உன்னை அடித்து நொறுக்கி விடுவேன்! வரை என்கிறேன்! ஊம், சீக்கிரம்!''

ஆனால் சின்ன ஓவியன் பதிலே சொல்லவில்லை. கறுத்த நீரை, வீரன் திருகாணி மிகவும் அஞ்சிய நீரை, கப்பல் சாளரத்தின் வழியாக ஏக்கத்துடன் பார்த்துக் கொண்டிருந்தான்.

கொள்ளைக்காரர்கள் என்னதான் கெஞ்சிக் கேட்டும், என்னதான் மிரட்டியும் பென்சில் ஒரு வார்த்தை கூடப் பேசவில்லை.

''கட்டிப் போடுவோம் இவனை! அறையில் தள்ளிப் பூட்டுவோம்! பட்டினி கிடக்கட்டும்!''

''நாமோ?''

''நமக்கு என்ன? இரண்டு டஜன் புருக்களைச் சுட்டுத் தள்ளுவோம்! பொரித்த புரு இறைச்சி தின்போம்! நாளைக்கு என் கப்பல் இந்த அசிங்கம் பிடித்த நகரத்தை விட்டுக் கிளம்பிப் பெருங் கடலுக்குப் போய் விடும். இந்த வண்ணந் தீற்றியை அங்கே படம் வரைய வைப்பேன்! இந்தக் கப்பலில் நான் கப்பித்தான்! 'பாய்களை விரிக்க!' என்று நாளைக்கு உத்தரவு இடுவேன்!'' என்று இறுமாப்புடன் சொன்னான் கடல் கொள்ளைக்காரன்.

''பாய்களை யார் விரிப்பார்களாம்?'' என்று தயக்கத்துடன் கேட்டான் துளையன்.

''வேறு யார், மாலுமிகள்தாம்!''

''ம்ம்-மாலுமிகள்! எந்த மாலுமிகள்? நம்மிடம் எங்கே இருக்கிறார்கள் மாலுமிகள்?''

''நான் கப்பித்தான் என்றால், மாலுமி நீதான்!'' என்றான் கடல் கொள்ளைக்காரன்.

''நான் மாலுமி அல்ல! பாய்களை விரிக்க எனக்குத் தெரியாது! நான் வலு இல்லாதவன்!'' என்று முனகினான் உளவாளி.

''வெறும் பேச்சு! நான் உனக்குச் சொல்லித் தருகிறேன். நீ வலு இல்லாதவன்தான். என் கப்பலில் சரியான மாலுமிக் குழு இல்லை. நமக்கு மட்டும் இன்னும் ஒரு கொள்ளைக்காரன் கிடைத்

தால் நன்றாய் இருக்கும்'' என்றான் கப்பித்தான் களகளன். புரியாத தடதடப்பு கரையில் கேட்டது. கொள்ளைக்காரர்கள் பாய்ந்து மேல் தளத்துக்குப் போனார்கள். வேனியா காஷ்கின் மிதக்கும் கடையின் துறைக்குக் குப்பைத் தொட்டியை உருட்டிக் கொண்டு வந்தான். ஆட்டக்காரனிடமிருந்து காற்பந்து விலகி ஓட முயல்வது போல வேனியாவிடமிருந்து தப்பி ஓட முயன்ற குப்பைத் தொட்டி கடகடப்பதும் கணகணப்பதுமாகத் துள்ளிக் குதித்துக் கொண்டிருந்தது. வேனியாவோ, அதை மறுபடி நெருங்கி உதைத்தான். தொட்டியின் விலாக்களை ஒரேயடியாக நசுக்கியிருந்தான் அவன்.

''உதை! இன்னோர் உதை! கோல்!'' என்று கூவினான் வேனியா.

அவனுக்கு மகிழ்ச்சியாகக் கூட இருந்தது. தொட்டியை உருட்டுகிறான், கூச்சல் போடுகிறான், அப்படியும் கேட்பார் இல்லை, கோபிப்பார் இல்லை: எல்லோரும் விழாக் கொண்டாடப் போயிருந்தார்கள்.

''அட கொள்ளைக்காரப் பயலே!''

மூன்றாவது மாடியில் சன்னல் கதவு திறந்தது, தூக்கக் கலக்கத்துடன் எட்டிப் பார்த்தாள் ஒரு பாட்டி.

‘‘என்னடா செய்து கொண்டிருக்கிருய், கடை கெட்ட கொள்ளைக்காரப் பயலே? இதோ வந்து ஒரு போடு போடுகிறேன் உன்னை!’’ என்று அதட்டிஞள்.

‘‘இவன் கொள்ளைக்காரனும்! கேட்டீர்களா, கப்பித்தான்? இவன் கொள்ளைக்காரனும்! நமக்கு வேண்டி இருந்தவன் இவனே தான். இவன் மாலுமியாக இருப்பான்! நானும் கட்டளையிட விரும்புகிறேன்!’’ என்று களிப்புடன் கத்திஞன் துளையன்.

கப்பித்தான் தாடியை ஆட்டி மார்பை நிமிர்த்திஞன்.

‘‘டேய், கொள்ளைக்காரத் தம்பீ! என் கப்பலில் ஏற உனக்கு ஆசை இல்லையா? நான்தான் கப்பல் தலைவன். இப்படி வா!’’ என்று கூவி அழைத்தான்.

‘‘என்ன? என்னையா கூப்பிடுகிறீர்கள் கப்பலுக்கு?’’ என்று தன் காதுகளையே நம்பாமல் கேட்டான் வேனியா.

‘‘ஆமாம், உன்னைத்தான்! தயவு செய்து மேல் தளத்துக்கு ஏறி வா!’’

மாயத்தால் கட்டுண்டவன் போலக் கரையோரக் கைப்பிடிச் சுவர் அருகே போஞன் வேனியா. ஆற்றின் அலைகள் மேல் அசைந்தாடிக்

கொண்டு அவனுக்கு எதிரே நின்றது அற்புதமான பாய்மரக் கப்பல்!

''மரியாதை வெடி! பீரங்கிகளைச் சுடுக!'' என்று உத்தரவிட்டான் கப்பித்தான் களகளன்.

திரைப்படம் பார்ப்பது போல் இருந்தது வேனியாவுக்கு. பீரங்கிகள் முழங்கின. வெடி மருந்தின் வெள்ளைப் புகை பாய்மரங்களுக்கு மேலே கிளம்பிற்று. மூன்றும் மாடிப் பாட்டி சன்னல் கதவைப் படீரென்று சாத்தினாள்.

''ஹுர்ரே!'' என்று வெற்றி முழக்கம் செய்தான் துளையன்.

''அருமை!'' என்று சிரித்தான் வேனியா.

குறுகலான பலகைப் பாலம் கப்பலிலிருந்து கரைக்குப் போடப்பட்டது. அலைகள் கப்பலைக் கரை ஓரத்துக்குத் தள்ளின. வேனியா பாலத்தின் வழியாக மேல் தளத்தில் தாவிக் குதித்தான். முதலில் கப்பித்தான் நெடுங்கால நண்பனைப் போல வேனியாவைத் தழுவிச் செம்பழுப்புத் தாடியால் அவனுக்குக் கிச்சுக்கிச்சு மூட்டினான். பிறகு துளையன் அவன் தோளைத் தட்டிக் கொடுத்தான்.

''வணக்கம், அருமை நண்பா!'' என்று கண் சிமிட்டினான் கடல் கொள்ளைக்காரன். ''காரியங்

கள் எல்லாம் எப்படி? நிறையக் கொள்ளை அடித்தாயா?'' என்று கேட்டான்.

''நானா?'' என்று ஆச்சரியப்பட்டான் வேனியா. ''கொள்ளை அடிக்கவில்லையே நான்...''

''நன்றாய்த்தான் கதை விடுகிறாய்! ஹ-ஹ--ஹா! நாங்கள் நம்பி விடுவோமே உன்னை! நீதான் கொள்ளைக்காரன் ஆயிற்றே! உன்னுடைய கள்ளப் பெயர் என்ன?''

''என்னது? கள்ளப் பெயரா?''

''அட அதுதான்... உன்னை எப்படிக் கூப்பிடுகிறார்கள்?''

''வேனியா என்று.''

''நான் கப்பித்தான் களகளன்.''

''நீங்கள் பெயர் பெற்ற கப்பல் தலைவர் போல் இருக்கிறது. நான் உங்களை எங்கேயோ பார்த்திருக்கிறேன்.''

''சந்தேகம் இல்லாமல் நான் பெயர் பெற்றவன்! என்னோடு கடலில் அலைகள் மேல் பயணம் செய்ய ஆசையா உனக்கு?''

''ஆசைதான்! கப்பலை ஓட்டிப் போக எனக்குக் கொள்ளை ஆசை!''

''அருமை! என் கொள்ளைக் கூட்டத்தில்... அதாவது மாலுமிக் குழுவில் உன்னைச் சேர்த்துக் கொள்ளுகிறேன். சேர்ந்து வழிப்பறி செய்வோம்!

சுடுவோம், கொளுத்துவோம், சூறையாடு வோம்!''

''எனக்குச் சூறையாடத் தெரியாது'' என்றான் வேனியா.

''ஹி-ஹி-ஹி, சரியான கோமாளி இவன்!'' என்று இளித்தான் துலையன். ''பிறத்தியார் கப்பல்களை நீ பிடுங்கினதோ முழுக அடித்ததோ கிடையவே கிடையாதா?''

''ஹ-ஹ-ஹ்ஹா! நாங்கள் உனக்குக் கற்றுக் கொடுப்போம்! இப்போது நம்மிடம் அசலான மாலுமிக் குழு சேர்ந்து விட்டது. நாங்களும் நீயும் சகோதரச் சோம்பேறிகள்... த்தூ... கொள்ளைக் காரர்கள்!'' என்றான் கடல் கொள்ளைக்காரன்.

வேனியாவுக்கு ஒன்றும் புரியவில்லை. ''நான் கொள்ளைக்காரன் அல்ல, கொள்ளை அடிக்க எனக்கு விருப்பம் இல்லை!'' என்று குழற்றினான்.

கொள்ளைக்காரர்களின் முகங்களையும் வளைந்த கட்டாரிகளையும் கைத்துப்பாக்கிகளையும் இப்போதுதான் அவன் நன்றாகப் பார்த்தான். வேனியாவுக்குத் திகில் உண்டாயிற்று.

''உனக்கு என்னதான் விருப்பம்?'' என்று கடுப்புடன் கேட்டான் கடல் கொள்ளைக்காரன்.

''கப்பல் ஓட்ட விருப்பம். கடல்களில், அலைகள் மேல்...''

''கப்பல் ஓட்டவா? கேட்டாயா, துளேயா, இவனுக்குக் கப்பல் ஓட்ட விருப்பமாம்! இன்னும் என்ன வேண்டும் உனக்கு?'' என்று வஞ்சக் களிப்பு தொனிக்கக் கேட்டான் கப்பித்தான்.

''வீட்டுக்குப் போக வேண்டும்!'' என்று கூவினன் வேனியா காஷ்கின்.

''துரோகம்! கைவிட்டு ஓடப் பார்க்கிருயா? இந்தக் கடைகெட்ட பயலேப் பாய்மரத்தில் தூக்குப் போடுவோம்!'' என்று உறுமினன் கடல் கொள்ளேக்காரன்.

அவன் கயிற்றை எடுத்தான். ஆனல் துளேயன் அவன் காதோடு கிசுகிசுத்தான்:

''இவனேத் தூக்கில் போடாதீர்கள், கப்பித் தான். நம்மிடம் உள்ள ஒரே மாலுமி இவன்தான்.''

வேனியாவுக்கு ஒரே பயமாய் இருந்தது.

''நான் அம்மா கிட்டே சொல்லுவேன்!'' என்று அலறினன்.

''அஹ்ற-ஹஹ்ற-ஹா! ஒஹ்ற-ஹொஹ்ற-ஹோ!'' என்று வெடிச் சிரிப்பு சிரித்தார்கள் கொள்ளேக் காரர்கள்.

''அம்மா!'' என்று வீரிட்டான் வேனியா.

அவன் கரையில் தாவிக் குதிக்கப் போனன். ஆனல் கொள்ளேக்காரர்கள் அவனேப் பிடித்துக்

கயிற்ருல் கட்டி, பென்சில் இருந்த அறைக்குள் தள்ளிப் பூட்டி விட்டார்கள்.

கரையோரச் சாலையில் வரிசையாகப் போயின லாரிகள். "உலோக உடைசல்கள்" என்ற அடையாளச் சொற்கள் அவற்றின் மேல் தீட்டப் பட்டிருந்தன. நகரத்தின் மறு கோடிக்கு, எஃகுத் தொழிலாளர் சதுக்கத்துக்கு அவை போய்க் கொண்டிருந்தன.

## அத்தியாயம் நாற்பத்து மூன்று

### இதில் எஃகுத் தொழிலாளர் ஆணிகளை வேக வைக்கிருர்

தானியத்தையோ உருளைக் கிழங்கையோ வேக வைப்பது எப்படி என்று பார்த்திருப்பாயே? தானியத்தை வேக வைக்கலாம். அதை வேக வைப்பது நிரம்பக் கடினம் அல்ல. ஆனுல் இரும்பு ஆணிகளை வேக வைக்க முடியுமா? ஆணிகள் கூழாகி விடும்படி அவைகளை வேக வைப்பது சாத்தியமா? இதோ தெரிந்து கொள்வோம்.

நகரத்தின் மறு கோடியில், எஃகுத் தொழிலாளர் சதுக்கத்தில், இரவு நேரம் எல்லாம் வேலை செய்து கொண்டிருந்தது பெரிய தொழிற்சாலை. பிரமாண்டமான கல் அடுப்புக்கள் இந்தத் தொழிற்சாலையில் இருந்தன.

கண்களைக் கூசச் செய்வதும் ஒரே அனல் வீசுவதுமான நெருப்பு அந்த அடுப்புக்களில் எரிந்து கொண்டிருந்தது. வெறும் கண்களால் அதைப் பார்ப்பதே கூடாததாக இருந்தது. இந்த அடுப்புக்களில் இரும்பு வேகவைக்கப்பட்டுக் கொண்டிருந்தது. தழலைப் போல் சூடாகவும் கூழைப் போல் நீர்த்ததாகவும் இருந்தது அது.

அடுப்பருகே வந்தார் எஃகுத் தொழிலாளர். மிக மிகக் கடினமான எஃகைக்கூட உருக்கிவிட அவர் திறமை கொண்டிருந்ததால் அவருக்கு இந்தப் பெயர் வந்தது. உருகிய உலோகத்தைக் கறுப்புக் கண்ணாடி வழியாகப் பார்த்து விட்டு, "எல்லாம் சரியாய் இருக்கிறது!" என்று சொன்னார் அவர்.

அப்போது அவரைத் தொலைபேசியில் யாரோ அழைப்பதாகத் தெரிந்தது.

"எஃகுத் தொழிலாளன் பேசுகிறேன்" என்றார் அவர்.

"தயவு செய்து எங்கள் உலோகக் கிடங்குக்கு வந்து சிறுவர்களும் சிறுமிகளும் சேகரித்துத் தந்திருக்கும் உலோகம் எப்பேர்ப்பட்டது என்று மதிப்பிடுங்கள்" என்று மறு புறம் இருந்தவர் கேட்டுக் கொண்டார்.

''ஆகட்டும். என் வேலை நேரம் இதோ முடிந்து விடும். கட்டாயம் வருகிறேன்!''

காலை ஆயிற்று. இரவு வேலை நேரம் முடிந்தது. அப்போது எஃகுத் தொழிலாளர் வேலை நேர மேலுடையைக் களைந்து விட்டு உலோகக் கிடங்குக்குப் போனார்.

''குழந்தைகள் நிரம்ப நல்ல உலோகம் அனுப்பி இருக்கிறார்கள். அருமையான குழந்தைகள்!'' என்று பாராட்டி விட்டு, ''இது என்ன வேடிக்கையான இயந்திரம்?'' என்று கேட்டார்.

''எந்த இயந்திரம்? அட, இதுவா? எனக்கே புரியவில்லை. சுருள் கம்பிகளும் முறுக்காணிகளுமாக விந்தையான இயந்திரம்! ஆனால் எப்போது நம்மிடம் வந்து விட்டதோ, இந்தத் துருப்பிடித்த இயந்திரம் ஒருவருக்கும் இனி வேண்டாம் என்று தெரிகிறது. இதை உருக்கி இந்த உலோகத்தால் ஏதாவது பயனுள்ள பொருள் தயாரிக்க வேண்டும். ஆனால், பாருங்களேன், இது மனிதனைப் போல் காணப்படுகிறது! நீங்கள் என்ன நினைக்கிறீர்கள்?'' என்று கேட்டார் கிடங்குக்காரர்.

''சரிதான், மெய்யாகவே மனிதன் போல் இருக்கிறது. விளையாட்டுப் பொம்மை என்று நினைக்கிறேன். பழுதுபட்ட பொம்மை. இதை எனக்குப் பரிசாகக் கொடுங்களேன். என் மகன்

தீமா சில நாட்களுக்கு முன்னுல் தொழில் வினைஞன் பட்டம் பெற்றிருக்கிருன். அவன் இதைச் செப்பனிடுவான்.''

''தாராளமாக எடுத்துக் கொள்ளுங்கள். ஆனல் இதை நேராக்குவதற்கு உங்கள் மகன் நிறையப் பாடுபட வேண்டி இருக்கும்.''

''என் மகனுக்கு அதனுல் நன்மை உண்டாகும். தொழில் தேர்ச்சியாளன் ஆக அவனுக்கு ஆசை. உண்மையான தேர்ச்சியாளனுக, வெறுமே பெயருக்கு அல்ல. உங்களுக்கு நன்றி. போய் வருகிறேன்!''

''போய் வாருங்கள், வணக்கம்!''

எஃகுத் தொழிலாளர் பதினைந்தாம் எண் டிராலிபஸ்ஸைப் பிடித்து, துப்புரவுச் சந்தில் இறங்கினுர். துருப்பிடித்த சின்ன இரும்பு மனிதனைச் செய்தித்தாளில் சுற்றிக் கக்கத்தில் இடுக்கிக் கொண்டிருந்தார்.

ஆருவது மாடிக்குப் போய் 21ம் இலக்கம் இட்ட இருப்பிடப் பகுதியின் வாயில் மணியை அடித்தார். அவருக்குக் கதவைத் திறந்தான் தீமா என்ற பையன். ஆமாம், அதே தீமா தான்! தீமாவின் தகப்பனுர் எஃகுத் தொழிலாளர் என்பது உங்களுக்குத் தெரியாதோ?

''வணக்கம், அப்பா!'' என்றான் தீமா.

''வணக்கம், மகனே. இந்தா உனக்குப் பரிசு, இரும்பு மனிதன். இவனை என்ன செய்யலாம், எப்படி நேராக்கலாம் என்று பார்.''

''மண்ணெண்ணெயில் முழுக்காட்டிக் கழுவி, துப்புரவு செய்து, முறுக்காணிகளை இறுக்கி, வண்ணம் பூச வேண்டும்'' என்றான் தீமா.

தகப்பனார் தந்த பரிசை இன்னொரு தரம் உற்றுப் பார்த்தவன், ''இவனை எனக்குத் தெரியும்! திருகாணி அல்லவா இவன்!'' என்று கத்தினான்.

''எந்தத் திருகாணி?.. அடே, ஆமாம்!'' என்று நினைவுபடுத்திக் கொண்டார் தகப்பனார். ''நான் அடையாளம் கண்டு கொள்ளவில்லை! இவனுடைய முறுக்காணிகள் ஒரேயடியாய்க் கழன்று கிடக்கின்றன! ஏதேனும் விபத்து நேர்ந்திருக்கும்! இவனைச் சீக்கிரமாகச் சரிப்படுத்த வேண்டும்! பாவம், திருகாணி!''

தீமா திருகாணியை மண்ணெண்ணெயில் இட்டுக் கழுவி, பட்டைச்சிலையால் துரு எல்லாம் போகத் தேய்த்துத் துப்புரவு செய்தான். அப்போது இரும்பு மனிதன் புதுப் பொம்மை போலப் பளபளத்தான். தீமா திருப்புளியை எடுத்து எல்லா முறுக்காணிகளையும் நன்றாக இறுக்கினான். பின்பு

வெளுத்த துணியால் இரும்பு மனிதனைத் துடைத் தான். எனமல் வண்ணத்தை அவன் மேல் பகட்டாகப் பூசினன். இரும்பு மனிதன் மிகவும் அழகுள்ளவன் ஆகி விட்டான், ஆனல் அசைய வில்லை.

''என்னதான் செய்வது?'' என்று திகைத்தார் எஃகுத் தொழிலாளர்.

''என்னல் சரி பண்ண முடியாது போல் இருக் கிறது. இளம் தொழில் வினைஞர்கள் மாளிகைக்கு ஓடிப் போய், பெயர் பெற்ற பென்சிலான் பரமனை அழைத்து வருகிறேன். அவன் நிரம்பப் பெயர் பெற்றவன், தொழிலில் மிகவும் தேர்ந்தவன்! அவன் சரியாக்கி விடுவான்!'' என்முன் தீமா.

''வேண்டாம், பொறு!'' என்று மகனை நிறுத் தினர் தகப்பனர். இரும்பு மனிதனை நாமே அங்கே கொண்டு போவோம், தேர்ந்த தொழி லாளர்கள் அங்கே நிறையப் பேர் இருப்பார்கள். உள்ளதைச் சொன்னல், எனக்கு என்னவோ பென்சிலான் மேல் அவ்வளவாக நம்பிக்கை இல்லை...''

## அத்தியாயம் நாற்பத்து நான்கு

### இதில் கம்பள விரிப்பு நகர்கிறது, கதவு பேசுகிறது

இளம் தொழில் வினைஞர்கள் மாளிகை மாதிரி அமைப்பாளர் வீதியில் இருந்தது. தீமாவும் அவன் தகப்பனும் உயரமான வாயில் கதவை நெருங்கினார்கள். கதவுக்குப் பிடி இல்லை. ஆனால் அவர்கள் கிட்டத்தில் போனதும் கதவு தானே திறந்து கொண்டது.

தானியங்கிக் கதவு ''நல் வரவு!'' என்று மரியாதையாகச் சொல்லிற்று.

தரை மேல் இருந்த அழகான கம்பள விரிப்பு மெட்ரோவின் இயங்கும் படிக்கட்டு போல அவர்களை ஏற்றிக் கொண்டு நகரத் தலைப்பட்டது.

''நீங்கள் எந்தப் பிரிவுக்குப் போக வேண்டும்?'' என்று மரியாதையாகக் கேட்டது.

அதுவும் தானியங்கிக் கம்பள விரிப்பு.

''எங்களுக்கு இனி மேல்தான் தெரிய வேண்டும்'' என்று எஃகுத் தொழிலாளர் சொன்னதும் கம்பள விரிப்பு நின்று விட்டது.

விசாலமான ஹாலில் மாட்டி இருந்தது பெயர் பெற்ற பரமன் பென்சிலானுடைய உருவப் படம். ஹாலின் இடது பக்கத்தில் இன்னது என்று புரியாத ஓர் இயந்திரத்தைத் தட்டுவதும் முறுக்

காணிகளால் இறுக்குவதும் துளை இடுவதுமாகச் சில சிறுவர்கள் வேலை செய்து கொண்டிருந்தார் கள்.

''தானே இயங்கும் உடுப்பறை தயாரித்துக் கொண்டிருக்கிறோம். வருபவர்களின் மேல் கோட் டுக்களையும் ரப்பர் சோடுகளையும் இது தானே கழற்றி வைக்கும்'' என்று அருகே வந்த எஃகுத் தொழிலாளரிடம் சொன்னார்கள் சிறுவர்கள்.

''தம்பிகளே, நாங்கள் ஓர் இரும்பு மனி தனைக் கொண்டு வந்திருக்கிறோம். அவன் பழுத டைந்து இருக்கிறான். செப்பனிட வேண்டும். யாரால் முடியும்?'' என்று கேட்டார் எஃகுத் தொழிலாளர்.

''பரமன் பென்சிலானால்!'' என்றான் தீமா.

''மெய்தான். பரமன் பெயர் பெற்ற நிபு ணன். அவனை விட நன்றாகச் செய்ய யாராலும் முடியாது!'' என்று ஒப்புக் கொண்டார்கள் பையன்கள்.

''அவனைத் தயை செய்து கூப்பிடுங்களேன்'' என்றார் தீமாவின் தகப்பனார்.

''அது எப்படி? நீங்கள் காத்திருக்க வேண் டியது தான். பென்சிலான் காரியமாய் இருக் கிறான். ஐஸ்கிரீம் பாக்டரிக்காரர்கள் முக்கியமான வேலைக்காக அவனிடம் வந்திருக்கிறார்கள்.

'பரமன்' என்ற பெயருள்ள புது ஐஸ்கிரீமைச் சுவைத்துப் பார்த்துக் கொண்டிருக்கிறான் அவன்!'' என்றார்கள் சிறுவர்கள்.

''ஐஸ்கிரீமைச் சுவைத்துப் பார்ப்பது நிரம்ப முக்கியமான வேலைதான். ஆனாலும் தயை செய்து அவனைக் கூப்பிடுங்கள். இரும்பு மனிதன் பெரிய விபத்துக்கு ஆளாகி இருக்கிறான்'' என்றார் எஃகுத் தொழிலாளர்.

சிறுவர்கள் அசையாமல் கிடந்த இரும்பு மனிதனைப் பார்த்துத் தலைகளை அசைத்தார்கள். பிறகு சுவர் மேல் இருந்த பளபளப்பான பொத் தான்களை அழுத்தினார்கள். நீண்ட எச்சரிக்கைக் குறி ஒலி ஹாலில் கேட்டது. தொலைக்காட்சிப் பெட்டியின் திரையில் காட்சி தெரிந்தது. பரமன் உட்கார்ந்து ஐஸ்கிரீம் சுவைத்துக்கொண்டிருந்த அறையை எல்லோரும் கண்டார்கள்.

''என்னை யார் கூப்பிடுகிறார்கள்?'' என்று கடுப் போடு கேட்டான் பரமன்.

''உன்னுடைய உதவி வேண்டும். உடனே, இக்கணமே வேண்டும்!''

''நான் காரியமாய் இருப்பது தெரியவில்லையா என்ன உங்களுக்கு?''

''மன்னித்துக் கொள், ஆனால் வேலை முக் கியமானது, நீ இல்லாமல் நடக்காது.''

''நான் இல்லாமல் நடக்காது என்ருல் இதோ வருகிறேன்!'' என்று மிடுக்காகக் கீச்சுக் குரலில் சொன்ஞன் பரமன்.

பெயர் பெற்றவனுக்கு ஏற்ற விதத்தில் நிதானமாக உள்ளே வந்தான்.

''என்ன நடந்தது?''

''தயவு செய்து இந்த இரும்பு மனிதனைச் செப்பனிட்டுக் கொடேன்...''

திருகாணியைக் கண்டதும் பரமன் அவனிடம் பாய்ந்து வந்தான்.

''திருகாணி! திருகாணி! நீ ஏன் துள்ள மாட்டேன் என்கிருய்? உன்னை உடைத்தது யார்?''

''செப்பனிட வேண்டும். அப்போது சொல்லுவான் உடைத்தது யார் என்று'' என்ருர்கள் சிறுவர்கள்.

''என்ஞல்... என்ஞல் செப்பனிட முடியாது, எனக்குத் தெரியாது'' என்று கூவிய பரமன் விம்மி விம்மி அழத் தொடங்கிஞன். ''எனக்கு ஒன்றுமே தெரியாது! மாதிரிக் கப்பலைக் கட்டியவன் நான் அல்ல, இவன்தான், திருகாணிதான் கட்டிஞன். பாவம், திருகாணி!'' என்று கண்ணீரைக் கன்னங்களில் பூசியபடிப் புலம்பிஞன்.

''நேரத்தை வீணுக்க வேண்டாம். இரும்பு மனிதனை நேராக்க யாரால் முடியும்?''

என்று அமைதியாகக் கேட்டார் எஃகுத் தொழிலாளர்.

''எங்களால் முடியும்!'' என்றார்கள் சிறுவர்கள்.

''நான் முயன்று பார்க்கிறேன்'' என்று கூவினான் தீமா.

''நல்லது! கருவிகளை எடுத்துக் கொள்ளுங்கள்! முறுக்காணிகளை இன்னொரு தரம் சரி பார்க்க வேண்டும் என்று எனக்குத் தோன்றுகிறது.''

சிறுவர்கள் இரும்பு மனிதனின் ஒவ்வொரு முறுக்காணியையும் கவனமாக இறுக்கினார்கள், ஒவ்வொரு சுருள் கம்பியையும் சரிபார்த்தார்கள்.

அப்போது திருகாணி கண்களைத் திறந்தான்.

''பரமனா? தீமாவா? இங்கே எப்படி வந்தீர்கள் நீங்கள்? கொள்ளைக்காரர்கள் எங்கே? பென்சில் எங்கே?'' என்று துள்ளி நின்றான். ''கொள்ளைக்காரர்கள் பென்சிலைக் கொன்று விடுவார்கள்! அவர்களிடம் கைத்துப்பாக்கிகள் இருக்கின்றன! அவர்கள் கப்பலைக் கைப்பற்றி விட்டார்கள்!'' என்று கூச்சலிட்டான்.

''கொள்ளைக்காரர்களாவது, கைத்துப்பாக்கிகளாவது?'' என்று விளங்காமல் திகைத்தார் எஃகுத் தொழிலாளர்.

''கடல் கொள்ளைக்காரனும் உளவாளி துளையனும்!''

''புரிந்தது'' என்று பெருமூச்சு விட்டார் எஃகுத் தொழிலாளர். ''பாவம், இரும்பு மனிதன் உளவாளிகளையும் பல விதக் கடல் கொள்ளைக் காரர்களையும் பற்றிய புத்தகங்களைக் கணக்கில்லாமல் படித்திருக்கிறான்...''

''அமைதித் துறைக்கு ஓடுங்கள்! பென்சிலைக் காப்பாற்றுங்கள்!'' என்று கூவினான் இரும்பு மனிதன்.

''அப்பா பென்சிலைக் காப்பாற்றுங்கள்!'' என்று அழுதான் பரமன்.

''அப்பா, உதவி செய்!'' என்றான் தீமா.

## அத்தியாயம் நாற்பத்தைந்து

### இதில் நம்முடைய கதை முடிகிறது

கொள்ளைக்காரர்களின் கறுப்புக் கொடியைப் பறக்க விட்டுக் கொண்டு தொலை தூரப் பயணத்துக்குப் புறப்பட்டது பாய்மரக் கப்பல் ''பரமன்''. கைகளும் கால்களும் கட்டப்பட்டு நெரிசலான அறையில் உட்கார்ந்து இருந்தார்கள் கைதிகள். மயிர் அடர்ந்த மார்பின் மேல் மாலுமிச் சட்டை அணிந்து, இடையில் செருகிய பெரிய கைத் துப்பாக்கியோடு கப்பலின் மேல் தளத்தில் நின்று

கொண்டிருந்தான் மிடுக்குள்ள செம்பழுப்புத் தாடிக்காரக் கப்பித்தான்.

''பாய்களை விரிக்க!'' என்று ஆணை இட்டான் கப்பித்தான் களகளன்.

இப்படி இருபத்தாறு தடவைகள் ஆணை இட்டான். வெறுங்கால்களோடு சிடுசிடுத்துக் கொண்டு பாய்மரங்களில் ஏறிக் கொண்டிருந்தான் மாலுமியாக வேலை செய்த துளையன். அவன் திணறினான், மூக்கை உறிஞ்சினான், வைது திட்டினான். இரண்டரை மணி நேரமாகப் பாய்களை விரிப்பதில் முனைந்திருந்த அவன் இப்போது கடைசிப் பாயோடு மல்லுக்கட்டிக் கொண்டிருந்தான்.

கரை நெடுகிலும் நிறைந்திருந்த சிறுவர்கள் இந்தக் காட்சியை ஆவலோடு பார்த்துக் கொண்டிருந்தார்கள். மிதக்கும் கடை வாடிக்கைக்காரர்களை எதிர்பார்த்தபடித் தன்னுடைய துறையில் நின்று கொண்டிருந்தது. ஆனால் வாடிக்கைக் காரர்களின் கவனம் எல்லாம் வேறு திசையில் திரும்பி இருந்தது.

பாய்மரக் கப்பல் பயணம் புறப்பட்டுக் கொண்டிருந்தது!

மாலுமி போல் காணப்பட்ட மீசைக்காரர் மிதக்கும் கடையில் உட்கார்ந்திருந்தார். பாய்கள் விரிக்கப்பட்ட விதத்தைப் பார்த்து, ''அட

கண்ணராவியே! படு மோசம், படு மோசம்! என்ன மாலுமி இந்த ஆள்! எல்லாம் தாறுமாருய்ச் செய்கிருனே!'' என்று வாய்க்குள் முணுமுணுத்தார்.

புதுக் கட்டிடம் கட்டிக் கொண்டிருந்த தொழிலாளர்கள், புகை பிடிப்பதற்காகச் சுமை தூக்கிக் கிரேன் இயந்திரத்தை நிறுத்திஞர்கள். கப்பல் பாய் விரித்துப் புறப்படுவதைப் பார்க்க அவர்களுக்கும் ஆவலாய் இருந்தது.

கடைசிப் பாயும் காற்றிஞல் உப்பியது.

''நங்கூரத்தைத் தூக்குக!'' என்று ஆணை இட்டான் கப்பித்தான்.

கப்பல் நடுங்கி, கரையிலிருந்து மெதுவாக விலகிச் செல்லத் தொடங்கிற்று.

''நில்லுங்கள்! நிறுத்துங்கள் இவர்களை!'' என்று யாரோ உரக்கக் கத்தியது கேட்டது.

துறைக்கு வந்து நின்றது ஒரு டாக்சி. தீமாவும் அவனுடைய தகப்பஞரும் திருகாணியும் பரமனும் அதிலிருந்து இறங்கிப் பாய்ந்தார்கள்.

''பிடியுங்கள் அவர்களை! அவர்கள் கொள்ளைக்காரர்கள்!'' என்ருர் எஃகுத் தொழிலாளர்.

''கேட்டீர்களா, இவர்கள் கொள்ளைக்காரர்களாம்! அசல் கொள்ளைக்காரர்கள்! அருமை!'' என்று கூச்சல் போட்டார்கள் சிறுவர்கள்.

''நில்லுங்கள்!'' என்று கட்டளை இட்டார் எஃகுத் தொழிலாளர்.

''எங்கே பென்சில்? அவனைத் திருப்பித் தாருங்கள்!'' என்று கத்தினார்கள் தீமாவும் திருகாணியும்.

கொள்ளைக்காரர்கள் திகிலும் வியப்பும் பொங்கத் திருகாணியைப் பார்த்தார்கள்.

துளையன் துணிச்சலோடு, ''நன்றாய்த் தந்தோமே! சந்தோஷமாகக் கரையில் இருங்கள்! கெக்கே!..'' என்று நொடித்தான்.

''படகின் இயந்திரத்தை முடுக்குங்கள், அவர்களை எட்டிப் பிடியுங்கள்'' என்று மீசைக்காரரைக் கேட்டுக் கொண்டார் எஃகுத் தொழிலாளர்.

''முயன்று பார்க்கிறேன். ஆனால் என் படகின் இயந்திரம் சரியாய் இல்லை. உடனே சரிப்படுத்த முடியுமோ, முடியாதோ!'' என்றார் மீசைக்காரர்.

கொள்ளைக்காரர்கள் கப்பலின் மேல் தளத்தில் குதித்துக் கூத்தாடிக் கொண்டு, ''மறுபடி சந்திப்போம்! கெக்கே!'' என்று கோரணி செய்தார்கள்.

''என்னதான் செய்வது? என்றால் இவர்களை நீந்திப் பிடிக்க முடியாதே'' என்று தவித்த எஃகுத் தொழிலாளர் நாலு பக்கமும் பார்வை செலுத்தினார். சுமை தூக்கிக் கிரேன் இயந்திரத்

தில் இருந்த தொழிலாளர்களைப் பார்த்ததும், ''இதோ பாருங்கள், தோழர்களே! அந்தக் கப்பலைக் கிரேனுல் எட்டிப் பிடியுங்கள்!'' என்று கத்தினுர்.

கப்பல் மேலும் மேலும் தொலைவில் போயிற்று. ஆனுல் கிரேன் இயந்திரத்தின் கை நீருக்கு மேலே நீளப் போய், கப்பலின் மேற்புறக் கயிறுகளைக் கொக்கியால் மாட்டிப் பிடித்து, இறகைத் தூக்குவது போலக் கப்பலை அலட்சியமாகத் தூக்கிற்று.

கொள்ளைக்காரர்கள் அரண்டு போய், ''காப்பாற்றுங்கள்! கொள்ளை அடிக்கிருர்களே!'' என்று அலறினுர்கள்.

அவர்கள் கப்பலின் மேல் தளத்தில் இங்கும் அங்கும் பாய்ந்தார்கள், துள்ளினுர்கள். கப்பல் அசைந்தது. கொள்ளைக்காரர்களும் சடைநாய் மைக்கறையும் ஆற்றில் குப்புற விழுந்தார்கள்.

''ஐயோ, முழுகி விடுவேனே! உதவுங்களேன்!'' என்று ஓலமிட்டான் துளையன்.

நீரில் மூழ்கிய கப்பித்தான் களகளன், குமிழிகளைக் கள-கள-களவென்று விட்டான்.

பெயர் பெற்ற கடல் கொள்ளைக்காரனுக்கு நீந்தவே தெரியாது என்பது தெரிய வந்தது!

மாலுமி போல் இருந்த மீசைக்காரர், ''ஆள் கப்பலிலிருந்து விழுந்து விட்டான்!'' என்று கூவி, மூழ்குபவர்களைக் காப்பாற்றுவதற்காக உடனே நீரில் பாய்ந்தார்.

கப்பல் கரை மேல் வைக்கப்பட்டது. திருகாணி அதில் தொற்றி ஏறி மேல் தளத்தை அடைந்தான். கைதிகள் இருந்த அறையின் பூட்டை எஃகுத் தொழிலாளர் கதவிலிருந்து அகற்றினர்.

திருகாணி அறைக்குள் ஓடினவன் வெகு நேரம் வரை வெளியே வரவில்லை.

அறையிலிருந்து முதலில் வெளியே வந்தான் வேனியா காஷ்கின். நனைந்து பரிதாபமாகக் காட்சி அளித்த கொள்ளைக்காரர்கள் கரைக்குக் கொண்டுவரப்பட்டார்கள். மீசைக்கார மாலுமி நாய்க் குட்டிகளைப் போல அவர்களைப் பின் கழுத்தில் பிடித்திருந்தார்.

அந்த நேரத்தில் மிலீஷியாக்காரர் மோட்டார் சைக்கிளில் வந்தார்.

''இவர்களா கொள்ளைக்காரர்கள்?'' என்று கேட்டார்.

''ஆமாம்.''

''அப்படியா!''

''நாங்கள் வேண்டுமென்று செய்யவில்லை!

இனிமேல் செய்ய மாட்டோம்!'' என்று அலறி ஞர்கள் கொள்ளைக்காரர்கள்.

சுற்றிலும் இருந்தவர்கள் எல்லோரும் கலீ ரென்று நகைத்தார்கள்.

''என்ன செய்ய மாட்டீர்கள்?'' என்று கேட் டார் மிலீஷியாக்காரர்.

''கொள்ளை அடிக்க மாட்டோம்!''

''நிரம்ப நல்லது! என்ன தான் செய்யப் போகிறீர்கள்?''

''ஒன்றுமே செய்யப் போவதில்லை!'' என்று வாக்களித்தார்கள் அவர்கள்.

''அது நடவாது. இந்த நாட்டிலே 'ஒன்றுமே செய்யாமல்' இருக்கக் கூடாது. வேலை செய்ய வேண்டும் கொள்ளைக்காரக் குடி மக்களே! ஆமாம்!''

''எங்களுக்கு வேலை செய்யத் தெரியாதே.''

''இந்த மாதிரி ஆட்களை இப்போதுதான் முதல் தடவையாகப் பார்க்கிறேன்! உங்களுக்குச் சலிப்பாய் இல்லையா என்ன? ஏதாவது தெரியுமா உங்களுக்கு?''

''எனக்கு ஆணை இடத் தெரியும். சுக்கான் இடப் புறம்! சுக்கான் வலப் புறம்!'' என்று பெரு மை அடித்துக் கொண்டான் கடல் கொள்ளைக் காரன்.

''எனக்கு மோப்பம் பிடிக்கவும் பின் தொடரவும் நோட்டம் பார்க்கவும் தெரியும்'' என்ருன் துளையன்.

''எதுவுமே பயன்படாது. மோப்பம் பிடிக்கவும் பின்தொடரவும் நோட்டம் பார்க்கவும் எங்களுக்குத் தேவையே இல்லை.''

''ஐயையே! நம்பவே முடியவில்லையே! பாருங்கள் இந்த நனைந்த ஆட்களை! இவர்களுக்கு ஒன்றும் செய்யத் தெரியாதாமே!'' என்று எல்லோரும் சொன்னுர்கள்.

''இவனுக்குப் பின் தொடரத் தெரியுமோ?'' என்று உளவாளியைக் காட்டிக் கேட்டார் ஒருவர். ''எங்களுக்கு வேண்டியவன் இவன்தான். நான் நகரத் தோட்டக்காரன். தோட்டங்களிலும் சிறிய பெரிய பூங்காக்களிலும் இவன் என்னேடு வேலை செய்வான். பட்டைதின்னி வண்டுகளையும் கம்பளிப் பூச்சிகளையும் தீங்கு செய்யும் பூச்சி புழுக்களையும் இவன் பின் தொடர்வான், நோட்டம் பார்ப்பான், மோப்பம் பிடிப்பான்'' என்ருர்.

''வள்-வள்!'' என்று குலைத்தது நனைந்த சடை நாய் மைக்கறை. ''பட்டைதின்னி வண்டுகளை மோப்பம் பிடிக்க எனக்கும் ஆசை!'' என்று சொல்ல விரும்பிற்று அது.

''பட்டைதின்னி வண்டுகளை நோட்டம் பார்ப்பது மிகவும் பயனுள்ள வேலை'' என்று பாராட்டினார் மீசைக்கார மாலுமி. ''தொப்பலாக நனைந்த இந்த மாலுமியை, இரங்கத் தக்க கப்பல் தலைவனை எங்கள் கடையில் நான் உதவிக்கு வைத்துக் கொள்கிறேன். எனக்கும் உதவியாள் தேவை. விளையாட்டுக் கப்பல்களைத் துறட்டி வலையால் எடுத்துத் தருவான். பாய்மரக் கப்பலில் கிளைக் கடை திறப்போம்.

''ஹுர்ரே! ஹுர்ரே!!'' என்று வெற்றி முழக்கம் செய்தார்கள் எல்லாப் பையன்களும்.

ஆனால் அவர்கள் வெற்றி முழக்கம் செய்தது அந்த நிமிடம் முதல் மிதக்கும் கடையின் விற்பனை ஆள் ஆகி விட்ட கப்பித்தான் களகளனுக்கு அல்ல.

கப்பல் அறையிலிருந்து வெளியே வந்த இரண்டு சிறு நண்பர்களுக்கே அவர்கள் வெற்றி கூறினார்கள்.

திருகாணி மகிழ்ச்சி பொங்கச் சிரித்தான்.

குதூகலம் உள்ள ஓவியன் புன்னகை செய்து எல்லாப் பையன்களையும் பார்த்துக் கையை ஆட்டினான்.

தீமாவிடமும் பரமனிடமும் எல்லா விவரங்களையும் கேட்டுத் தெரிந்து கொண்டி

ருந்த சிறுவர்களும் சிறுமிகளும் முழங்கினூர்கள்:

''வீரத் திருகாணி நீடூழி வாழ்க!''

''மாய ஓவியன் பென்சில் நீடூழி வாழ்க!''

''வெல்க! வெல்க! வெல்க!''

தீமாவுக்கு எல்லாம் தெரிய வேண்டும் என்பதற்காக எஃகுத் தொழிலாளி அவனைக் கைகளில் தூக்கிக் கொண்டார்.

''ஹுர்ரே! வெற்றி! ஹுர்ரே!'' என்று கத்தினுன் தீமா.

## அத்தியாயம் நாற்பத்தாறு

### இதுதான் கடைசி

சில நாட்களுக்குப் பின்னுல் நகரத்தின் மிக அழகான வெயிலொளிச் சதுக்கத்தில் ஒரு பெரிய விளம்பரப் பலகை வைக்கப்பட்டது. அதில் இப்படி எழுதப்பட்டிருந்தது:

**குழந்தைகளே!**

**மாயப் படங்கள் வரைவதற்குக்**
**கற்க விரும்புபவர்கள்**
**பென்சிலும் திருகாணியும் நடத்தும்**
**புதிய பள்ளியில் சேருங்கள்!**

**முகவரி: கற்பனையாளர் சதுக்கத்தின் அருகில், கனவு காண்போர் வீதி. 21ம் இல்லம். எல்லா விதமான மாயப் படங்களும் வரைய இந்தப் பள்ளியில் கற்பிக்கப்படும்! காகிதத்தில் நீங்கள்**

வரையும் வீடுகள் பசுமையான மிக அழகிய வீதிகளில் தோன்றும். மகிழ்ச்சி உள்ள நல்ல மனிதர்கள் அவற்றில் வசிப்பார்கள். நீங்கள் வரைந்த கார்களில் அவர்கள் பயணம் செய்வார்கள், நீங்கள் வரைந்த உடைகளை அணிவார்கள், நீங்கள் வரைந்த நாடக மன்றங்களுக்குப் போவார்கள்.

நகரங்களும் இயந்திரங்களும் தொழிற்சாலைகளும் பள்ளிகளும் சாலைகளும் விமானங்களும் மிகப் பயனுள்ள லட்சக்கணக்கான பொருள்களும் உங்களால் திட்டமிடவும் வரையவும் படும்! நீங்கள் வரையும் ராக்கெட்டு உங்களைத் தொலைவில் உள்ள நிலாவுக்கு ஏற்றிப் போகும்!

*மாயப் படங்கள் வரைவதற்குக் கற்க விரும்புபவர்கள் புதிய பள்ளியில் சேருங்கள்!*

உங்களை அழைக்கிறார்கள்:

மாய ஓவியன், பட வரைவு ஆசிரியன்

*பென்சிலும்*

தலைமை விஞ்ஞானி, பொறிவினைஞன், ஆலோசகன்

*திருகாணி மேஸ்திரியும்*

*குழந்தைகள் புதிய பள்ளியில் பெயர்களைப் பதிவு செய்து கொண்டிருந்த போது பென்சிலும் திருகாணியும் பெரிய பயணம் புறப்பட்டார்கள். எல்லாவற்றையும் நேரில் காணவும் எல்லாவற்றையும் தெரிந்து கொள்ளவும் சரி பார்க்கவும் அவர்கள் முடிவு செய்தார்கள்—புதிய பள்ளியில் குழந்தைகளுக்கு நன்றாகவும் சரியாகவும் கற்றுக் கொடுக்கும் பொருட்டு.*

மாயப் பையன் பரமன் புதிய பள்ளியின் தொடக்க வகுப்பில் சேர்ந்தான்.

சிறு மாய ஓவியனையும் வீர இரும்பு மனிதனையும் பற்றிய நமது கதை இத்துடன் முடிவடைகிறது. இரும்பு மனிதன் சாதாரணமானவன்தான், ஆனாலும் அசல் மாய வித்தைக்காரர்களுக்கு எந்த விதத்திலும் குறையாமல் பல செயல்களைச் செய்ய அவனால் முடிந்தது. இந்தச் சந்தர்ப்பத்தில் உங்களுக்கு ஒரு சேதியை இரகசியமாகச் சொல்லி விடுகிறேன். ''எல்லாவற்றையும் தானே செய்பவன், கட்டாயம் மாய வித்தைக்காரன் ஆவான்'' என்று மாய வித்தைக்காரர்கள் கூறுகிறார்கள்.

வணக்கம்!

**விற்பனையாளர்கள்**

**நியூ செஞ்சுரி புக் ஹவுஸ் பிரைவேட் லிமிடெட்**

**தலைமை அலுவலகம்**

*41. பி. சிட்கோ இண்டஸ்ட்ரியல் எஸ்டேட். சென்னை—600098.*

**ஷோ-ரூம்**

*136. மவுண்ட் ரோடு. சென்னை—600002*

**கிளைகள்**

*80. மேலக் கோபுர வீதி. மதுரை—625001.*

*87/89. ஒப்பணக்கார தெரு. கோயம்பத்தூர் —641001.*

*சிங்காரத் தோப்பு. திருச்சிராப்பள்ளி—620008*

*செர்ரி ரோடு. சேலம்—636001.*

**விற்பனை நிலையங்கள்**

*3—22—75—D மதுரை சாலை;*

*திருநெல்வேலி ஜங்ஷன்.*

*66, கீழராஜ வீதி, தஞ்சாவூர்.*